

என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே.

# உண்மை விளக்கம்

வச்சிரவேலு முதலியார் தெளிவுரை
நல்லாசாமிப்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு

யாழ்ப்பாணம்
கூட்டுறவுத் தமிழ் நூற்பதிப்பு விற்பனைக் கழகம்

உ

சிவமயம்

திருவதிகை

**மணவாசகங்கடந்த தேவநாயனார்**

இயற்றிய

# உண்மை விளக்கம்

திருவாவடுதுறை ஆதீனத் தமிழ்ப்புலவர்

திரு. க. வச்சிரவேலு முதலியார் அவர்கள் B. A., L. T.

எழுதிய தெளிவுரையும்

திரு. J. M. நல்லாசாமிப்பிள்ளை அவர்கள் B. A., B. L.

எழுதிய ஆங்கில மொழிபெயர்ப்பும்.



வெளியீடு :

யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக் கழகம்

**411/1, காங்கேசன் துறை வீதி, யாழ்ப்பாணம்.**

முதற் பதிப்பு: (யாழ். கழகம்) 1971
படிகள்: 1000


விலை ரூபா: 1-50

J. C. T. B. P. & S. S. PUBLICATION No. 10

MANAVASAKAM-KADANTA-DEVA-NAYANAR'S

# UNMAI - VILAKKAM

*Commentary by:* K. Vajiravelu Mudaliyar, B. A., L. T.
*English Translation by:* J. M. Nallasamy Pillai, B. A., B. L.

*Published by:*

THE JAFFNA CO-OPERATIVE TAMIL BOOKS PUBLICATION AND SALES SOCIETY LTD.
*(Regd. No. J-1538 of 10-11-67)*

411/1, K.K.S. ROAD, — JAFFNA.

அச்சுப்பதிவு: கூட்டுறவு அச்சகம், யாழ்ப்பாணம்.



## சிறப்புப்பாயிரம்

பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்கள் பாடியது

உண்மை விளக்கம் உயர்சைவ சித்தாந்த
வெண்ணெய்; அதையுருக்கி மென்மை செய்து
— நுண்மையவர்
உச்சிமேற் கொள்ள உரைவிளக்கஞ் செய்திட்டார்
வச்சிர வேல்முதலி யார்.



சிவஞான போத திராவிடமா பாடியம்
பவமான போக்கும் பயோததி; அதன்பால்
இரண்டாஞ் சூத்திரக் கெழுந்த பாடியம்
தத்துவ விசாரம் சிவாகம சாரம்;
அதுதான்,
உய்த்துணர்ந் தறிதற் குறுதவம் வேண்டும்;
அதனால்,
என்னோ ரனையரும் அதனை எட்டத்
தவம்பெருஞ் செல்வர் தந்ததிந்த
உண்மை விளக்க உரைவிளக் கம்மே.



சித்தாந்தச் செல்வர் திருவா வடுதுறையில்
முத்தாய் விளங்குகின்ற மூதறிஞர்
— இத்தரைக்கோர்
அச்சா யமைந்த அரும்பெறல்நல் லாசிரியர்
வச்சிர வேல்முதலி யார்.

# பதிப்புரை

எங்கள் சைவ சித்தாந்த சாத்திர வெளியீட்டுத் தொடரில் 'உண்மை விளக்கம்' என்ற இந்நூல் இரண்டாவதாகும். திருவுந்தியார் சில மாதங்கட்கு முன்பு வெளிவந்துவிட்டது. சிவஞானசித்தியார் சுபக்கம் - திருவிளங்கமுரை - இன்னும் சிலமாதங்களில் வெளிவரும்.

இந்நூலினை திரு. க. வச்சிரவேலு முதலியாரவர்கள் எழுதிய சிறந்த தெளிவுரையோடு சேர்த்து வெளியிட வேண்டுமென்று விரும்பி அன்னாருக்கு இசைவு நல்கும்படி விண்ணப்பித்திருந்தோம். மக்கள் சித்தாந்தச் செந்நெறியே வாழ வேண்டுமென்ற பேரார்வம் கொண்ட மதிப்பிற்குரிய முதலியாரவர்கள் நாம் விரும்பிய இசைவை நல்கியதோடு, அரியதோர் முன்னுரையும் எழுதி வழங்கினார்கள். அவர்களின் இனிய பண்புக்கும் அரிய சேவைக்கும் நாங்கள் நன்றி கூறியமையாது.

இந்நூலையும், முதலியாரவர்களின் தெளிவுரையையும் அவை அச்சாகுங்கால் வாசித்து மகிழ்ந்த பண்டிதமணியவர்கள் ஓர் அரிய உரைச்சிறப்புப் பாயிரத்தைப் பாடியளித்தார்கள். அவர்கள் எங்களுக்கு அளித்துவரும் அயரா உழைப்பு, உதவி, ஊக்கங்களுக்கு நாம் என்றென்றும் கடமைப்பட்டுள்ளோம்.

எங்கள் முந்திய நூல்களுக்குச் செய்ததுபோல் இந்நூலுக்கும் தோன்றாத் துணையாக இருந்து அச்சுத்தாள்களைப் பார்வையிட்டும் வேறு பல வழிகளில் உதவி செய்தும் வருகின்ற சிவதொண்டன் நிலையத் திரு. அ. செல்லத்துரையவர்களுக்கு நாம் கொண்டுள்ள நன்றிக் கடன் சொல்லுந்தரமன்று.

வழக்கம்போல இந்நூலும் இத்துணைச் சிறப்பாக வெளிவர உதவிய யாழ். கூட்டுறவு அச்சக அதிபர், எழுதுநர், தொழிலாளர் ஆகிய அனைவருக்கும் எங்கள் நன்றியுரியது.

411/1, கே.கே.எஸ்.வீதி,
யாழ்ப்பாணம்,
14-1-71
(பொங்கற்றிருநாள்.)

சி. சிவகுருநாதன்
தலைவர்
யா.கூ.த.நா.ப.வி.கழகம்

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# உண்மை விளக்கத் தெளிவுரை

## இரண்டாம் பதிப்பு முன்னுரை

மக்கள் பின்பற்றும் சமயநெறிகள் பற்பல. அவை அவரவர் குடிப்பிறப்பிற்கும், வளர்ப்புச் சூழ்நிலைக்கும், அறிவின் திறத்திற்கும், உள்ளத்தின் உயர்ச்சிக்கும் ஏற்றபடி அவர்தம் உணர்வைப்பற்றி நின்று, அவரவரைப் பல்வேறு வகையில் முயலும்படி தூண்டுவன. அவற்றைப் பின்பற்றுவோர் தம் மனப்போக்கிற்கும் நோக்கிற்கும் தேவைக்கும் ஏற்றபடி அவற்றிற்கு விளக்கங் கண்டு அவற்றின் வழி நிற்பதும், சில நேரங்களில் தாம் நிற்பதை விடப் பிறரை அவ்வழிகளிற் கொண்டுவர முயல்வதும் உடையர்.

அந்நெறிகளால் பெறக்கூடிய பயன்களை அவற்றின் குறிக்கோள்பற்றியும் நம்பிக்கையின் எல்லைபற்றியும் ஒருவாறு அளவிட்டறியலாம். குறிக்கோள் பின்வரும் மூன்று வகையுள் அடங்கும்:- (1) உலகப்பொருட்பேறு (அநான்ம சிறேயசு), (2) தற்பேறு (ஆன்ம சிறேயசு), (3) முதல்வனைப் பெறுதல் (பரமான்ம சிறேயசு) என்பவை அவை. சமய நெறிகளின் நம்பிக்கையின் எல்லைகளைக் கண்டுணரின், அவை முறையே (1) இம்மை நுகர்ச்சி ஒன்றனையே உண்டெனல், (2) மறுமை நலனை உடன்படல். (3) இவற்றை உடன்பட்டும், படாமலும், வீடுபேற்றினை உடன்படல் என்னும் மூன்றனுள் அடங்கும்.

இவற்றுள், இம்மை மறுமை வீடு என்னும் மூன்றனையும் இயைத்துணர்த்தி அவற்றின் இயல்புகளைச் செம்புலச் செல்வர் மாசறு காட்சியால் தெளிவிக்கும் தனிச்சிறப்பு வாய்ந்த தெய்வத்திருநெறி சித்தாந்த சைவ நெறியே

ஆகும். பிறசமயங்களுள் பலநெறி எனப்படினும் அவை நெறியல்லா நெறியாயும், குறுக்கு வழியாயும், சுற்றுவழி யாயும் அமைந்துள்ளமை நல்லாற்றான் நாடி உணர்வார்க்கு எளிதின் விளங்கும்; சில சமயங்கள் அவற்றின் தலைவர்க ளால் மக்களைத் தம்பக்கல் துணையாக ஈர்த்துக்கொள்ளு தற்பொருட்டுப் பின்விளைவு கருதாத் வெறும் உத்திவாதங் களாகச் சுட்டிப் பேசப்பட்டவையாதலும் கருதத்தக்கது.

சித்தாந்த சைவநெறியில், முடிநிலைக்குறிக்கோளாக வும், பரமதாரகமாகவும் பற்றுதற்குரிய முதற்பொருள் சிவம் எனப்படும். அஃது இயற்கை முற்றுணர்வுடைய, எவ்வகை மாறுதலும் அடைதல் இல்லாத தூய செம் பொருள்; பிறபொருள்களின் ஆற்றல்களை விளங்கச் செய்து செலுத்தி நிற்கும் பேராற்றலும், தன்னையே உயிர் களுக்குப் பெறலரும் பேறுக வழங்கும் பேரருளும் உடைய பேரின்பப்பொருள். சிவம் என்னும் மறைமொழி இப் பொருண்மை எல்லாம் செறியக்கொண்டு ஒருவர்க்கு உணர் வும், இன்பமும் ஊட்டவல்லது.

சைவம் என்னும் சொல் சிவசம்பந்தம் உடையது என்னும் பொருளைத்தரும். "தெய்வம் சிவமே, சிவனருள் சமயம்-சைவம், சிவத்தொடு சம்பந்தம் என்றான்" என்பது திருச்சிற்றம்பல நாடிகளுக்கு முருகப்பெருமான் கூறியரு ளிய உறுதிமொழி. உயிர்களின் உணர்வின் முதலாய் பூவின் கண் மணம்போல உள்ளது சிவமே ஆதலால், எல்லா உயி ரும் சைவமேஆகும். ஆயினும், அவ்வுண்மையை உணர்ந்து தம் உணர்வில் சிவம் பெருக்கும் திருவுடையவர்களே சைவர் எனச் சிறப்பிக்கப் பெறுவர்.

இத்தகைய சைவர்கள் மெய்ப்பொருளைக் காணுதற் பொருட்டு முதற்கண் கேட்டற்கு உரிய ஞானநூல் "உண்மை விளக்கமே" ஆகும். எல்லா நூல்களும் கற்ற பின் அவற்றின் தெளிவாய் உளம் கொண்டுணரும் மெய்ப் பொருளியலாகிய தேன் அமுதைக் கொண்டுள்ளதும் இந் நூலே ஆகும். இதற்கு மெய்கண்ட சந்தான அனுபவத் திரட்டு என்பது பெரியோர் வழங்கும் பெயர்.

இத்தகைய நூல்களுக்குக் கற்போர் உணர்வைப் பல தலைப்பட உய்க்கும் விரிவுரைகள் எழுதுவது மரபன்று; ஒரு நெறிய மனம் வைத்துணர்வதற்குத் துணையாகச் சுருக் கமும், விளக்கமும் உள்ள தெளிவுரையே வேண்டற்பாலது. தலையாய அறிவினர் கொண்டுள்ள இத்துணிவு பற்றிப் பன்னிரண்டு ஆண்டுகளுக்குமுன் அடியேன் தருமை ஆதீ னத்தின் சார்பில் சென்னையில் நடத்தி வந்த "உண்மை விளக்க"ப்பாட வகுப்பு நிறைவெய்தியவுடன் எழுதி அச்சிட்டு வழங்கியது இந்நூற்கண் உள்ள உரை. அஃது இப்பொழுது மீள நோக்கப்பெற்றுச் சிற்சில திருத்தங்கள் பெற்று வருகின்றது. அன்பர்கள் கற்றுணர்ந்து நூற்பயன் பெறுக!

ஆழ்க தீயது! எல்லாம் அரனுமமே
சூழ்க!! வையகமும் துயர் தீர்கவே!!!

இங்ஙனம்,

காஞ்சிபுரம்,
27-1-1970.

**க. வச்சிரவேல்முதலியார்**
திருவாவடுதுறை ஆதீன வித்துவான்

உ

## சந்தானகுரவர் வணக்கம்

ஈராண்டிற் சிவஞானம் பெற்றுயர்ந்த மெய்கண்டார்
இணைத்தாள் போற்றி
நாராண்ட பல்லடியார்க் கருள்புரிந்த அருணந்தி
நற்றாள் போற்றி
நீராண்ட கடந்தைநகர் மறைஞான சம்பந்தர்
நிழற்றாள் போற்றி
சீராண்ட தில்லைநகர் உமாபதியார் செம்பதுமத்
திருத்தாள் போற்றி.



தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் — ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

திருவதிகை

மனவாசகங் கடந்த தேவநாயனர்

அருளிச் செய்த

# உண்மை விளக்கம்

உரையுடன்

## காப்பு

வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா
உண்மை விளக்கம் உரைசெய்யத் — திண்மதஞ்சேர்
அந்திநிறத் தந்திமுகத் தொந்திவயிற் றைங்கரனைப்
பந்தமறப் புந்தியுள்வைப் பாம்.

பொழிப்புரை: *மறைமுடிவின் பொருள் வளத்தை எடுத்தோதி விளக்குவன சிவாகமங்கள்; அச்சிவாகமங்களில் இறைவன் அமைத்தருளிய பொருள் முடிவைக் குற்றமறக் கொண்டுரைக்க எழுவது உண்மை விளக்கம் என்னும் இந்நூல்; இதனை உரைத்தற்கும், (கேட்போர் உள்ளத்தில் உள்ள பழைய பழக்க உணர்வாகிய) தளை அறுதற்கும் ஐந்து திருக்கைகளையுடைய மூத்த பிள்ளையாரை உள்ளத்திற்கொண்டு வழிபடுவோம் (ஆக)! பிள்ளையார் அழுத்தமான மதநீர் ஒழுகும் கன்னங்களையும், அந்திவானம் போலும் சிவந்த திருமேனியையும்; யானைமுகத்தையும், பருத்துச்சரியும் திருவயிற்றினையும் உடையவராக நினைக்கற்பாலர்.*

**விளக்கவுரை:** ஆகம நூல் வைத்த பொருளினின்றும் வழுவா(த) உண்மை விளக்கம் உரைசெய்ய, பந்த மற, ஐங்கரனைப் புந்தியுள் வைப்பாம் – எனக் கூட்டி முடிக்க.

இக்காப்புப் பெரியோர்கள் மேற்கொண்டுவரும் ஒழுகலாற்றைப் பாதுகாத்து, மாணாக்கர்க்கு அதனை அறிவுறுத்தற் பொருட்டுச் செய்யுள் வடிவில் நூல் முகத்து வைக்கப்பட்டது. நூலை உரைத்தற்கண்வரும் இடையூற்றின் நீக்கமும், பந்தம் அறுதலும் பின்வரும் உரையாசிரியர். போதகாசிரியர், மாணாக்கர் முதலாயினோர்க்கே வேண்டற்பாலன; நூலாசிரியர் தவத்தால் மனந்தூயராய், முக்குணங்களையும் கடந்த அறிவர் ஆகலின், அவர்க்கு இடையூறு எய்தாது, பந்தமும் இல்லை. மாணாக்கரை நினைப்பித்து உய்வித்தற் பொருட்டே அவர் மாணாக்கரை உளப்படுத்தி ஐங்கரனைப் புந்தியுள் வைப்பாம் என்றார்.

உண்மை விளக்கம் என்னும் நூற்பெயர் உண்மையை விளக்குவது என்னும் பொருளில் உள்ளது. மெய்யுணர்ந்தோரால் முடிந்த உண்மைப் பொருள்களாக உணர்ந்து உரைக்கப்படுவன இறை, உயிர், தளை என்னும் மூன்றுமே ஆம். ஆகலின் இங்கு உண்மை என்றது அம்முப்பொருள்களின் இருப்பும் (Existence), இயல்புமே (Characteristics) ஆம்.

வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள் வழுவா(த) என்னும் அடைமொழியால் இந்நூல் சிவாகமங்களின் வழிநூலாக இயற்றப்பட்டு, வேதாகமங்களின் பொருள் முடிவைக் குற்றம் குறையின்றித் தொகுத்துரைப்பது என்பது குறிக்கப்பட்டது. இவ்வாறு பொருள் முடிவை உணர்வதும், உணர்த்துவதும் நூல் அறிவு ஒன்றே கொண்டு செய்வன அல்ல; நூலறிவு கடல்நீர் போன்றது; கடல்நீர் நீர்வேட்கையை மிகுவிக்குமே அன்றித் தணிக்காது; தெளிந்த தூயநீரே தாகத்தைத் தணிக்கும். அங்ஙனமே நூலறிவு ஐயவிபரீதங்களை மிகுதிப்படுத்துமே யன்றிக்



குறைக்கமாட்டாது; அருளாசான் உபதேச மொழியே ஐயந்திரிபு களைந்து, நம் சிந்தையைத் தெளிவிக்க வல்லது. ஆதலினால், இவ்வாசிரியர், பிறர் பலரைப்போல வேதாகம மேற்கோள்களைக் காட்ட முயலாது, அவற்றின் உண்மைப் பொருள் முடிபை, மெய்கண்ட முதல்வர் பால் தாம் கேட்டுணர்ந்த முறையிலே, தொகை, வகை, விரியாகக்கூறுகின்றார்; மெய்கண்ட முதல்வரைத் தாம் வினவ, அதற்கு அவர் கருணைகூர்ந்து உரைத்துவரும் விடைகளாக நூற்பொருளை அமைத்து உரைத்தருளுகின்றார். இக்காரணம் பற்றி இந்நூல் மெய்கண்ட சந்தான அநுபவத்திரட்டு என வழங்கப்படும். இதனால் இதன் அருமையும், பெருமையும், பயனும் விளங்கும்.

வண்மைதரும் ஆகம நூல் என்ற தொடரின் பொருள், இந்நூல் இறுதியில் சிறப்புப்பாயிரமாக இயற்றப்பட்டு வழங்கிவரும் பாட்டில் ''பன்னுமறை வண்மைதரும் ஆகம நூல்'' என விரித்துரைத்தல் பற்றியும், பொருந்துமாறு பற்றியும் உரைக்கப்பட்டது. இதனால் மறைகளின் பொருள் சிவாகமங்கள் தரும் விளக்கம் பற்றியே உணரப்படும் என்பதும், அது நம்மனோர் சிற்றறிவு கொண்டு நிச்சயப்படுத்தத்தக்கது அன்று என்பதும் விளங்கும். ''வேதம் பொது; ஆகமம் அருஞ்சிறப்பு நூல்'' என ஆசிரியர்கள் உரைத்துவருவது நினைக்கத்தக்கது.

## நூல்

### குரு முதல்வரை வேண்டுதல்

**பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதாநந் தப்பொருளாம்**
**மெய்காட்டும் மெய்கண்டாய்! விண்ணப்பம்; — பொய்காட்டா**
**மெய்யா! திருவெண்ணை வித்தகா! சுத்தவினா**
**ஐயர்!நீ தான்கேட் டருள். (1)**

**பொ-ரை:** நிலையாத உணர்வுகளைத் தோற்றுவிக்கும் தத்துவங்களின் இயல்பைச் சுட்டிக்காட்டி, அதனால்

ஆன்மாவின் உண்மையியல்பை அவற்றின் வேறாக உணரச் செய்து, இம்முறையால் பொய் அகன்று நிற்கும் ஆன்ம உணர்வில் நீர்நிழல்போல் கலந்துள்ள சிவனது தாளை அநுபவமாக உணரவைக்கும் மெய்கண்ட தேவரே! உமக்கு ஒரு வேண்டுகோள். அணைந்தார்க்கு வாதனைமலம் அறுத்து அவர் மீண்டும் பொய்யுணர்வில் வாராதபடி காத்து வீட்டுநெறியின் உய்க்கும் திருமேனி உடையவரே! திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருந்து திருவருள் நெறியை விளக்கியருளும் வித்தகரே! குருமுதல்வரே! அடியேன், கேவலம், சகலம் என்னும் நிலைகளின் நீங்கிச் சுத்த நிலை பெறுதற்கு ஏதுவாக, வினவும் வினாக்களைத் திருச்செவியேற்று, அறிவுரைகளை ஈந்தருள்க.

**வி-ரை:** இப்பாட்டு நூலுட் கூறப்படும் பொருள் முழுவதையும் தொகுத்துச் சுட்டுகின்றது; அடுத்து வருவது அதனை வகுத்துக் காட்டுவது; பின்வரும் பாட்டுக்களெல்லாம் விரித்துரைப்பவை.

**பொய்காட்டி:** உயிர்களாகிய நமக்கு இப்பிறப்பு நிலையில் கணந்தோறும் பலதலைப்பட்ட உணர்வுகள் தோன்றி மறைந்து வருகின்றன. உதாரணமாக ஒரு பொருளைக் காண்கின்றோம்; மற்றொன்றைக் கேட்கின்றோம்; மூன்றாவதொன்றைக் கருதுகின்றோம். இவ்வுணர்வுகள் நம்பால் எவ்வாறு உண்டாகின்றன? கண்ணால் காண்கின்றோம்; காதால் கேட்கின்றோம்; மனத்தால் கருதுகின்றோம். இவ்வாறு நிலையின்றித் தோன்றி மறைந்து வரும் உணர்வுகளை நமக்குத் தோற்றுவிப்பனவாகிய கருவிகள் தத்துவங்கள் எனப்படும். இவற்றை நிலம் (பிருதிவி) முதல் நாதம் முடிவாக முப்பத்தாறு எனப் பெரியோர்கள் உணர்ந்து எண்ணியிருக்கின்றார்கள். இவை நம் அறிவில் பொய்யான உணர்வுகளை எழுப்புதலால் பொய் எனப்படும். பொய் - நிலையாதது; இல்லாதது என்பது கருத்தன்று. மெய்கண்ட முதல்வர், தம்மை அடைந்தார்க்கு, இன்ன இன்ன தத்துவம் இன்ன இன்ன உணர்வை ஆன்மாவின்



கண் உண்டாக்கும் என அறிவிப்பர். இவ்வாறு முப்பத்தாறு தத்துவங்களையும் இது, இது எனச் சுட்டி உணர வைப்பதே பொய்(யைக்) காட்டல் ஆம்.

**பொய் அகற்றி:** இனி, மேற்கூறியபடி தத்துவங்களைக் காட்டக் காணும் மாணாக்கன் அவற்றை இது, இது எனச் சுட்டி உணர்ந்து வருகையில், அவன்றன் அறிவு அவற்றின் நீங்கும்; அஃதாவது, 'இது நான் அல்லேன், இது நான் அல்லேன்' எனத் தத்துவங்களின் நீங்கித் தன்னையே நோக்கி நிற்கும். இவ்வாறு செயற்கையாகிய தத்துவ உணர்வுகளினின்றும் நீங்கி, ஆன்ம உணர்வைத் தன் இயல்பின் நிறுத்துதலே பொய் அகற்றல் ஆம். இஃது இரண்டாம் படிநிலையாக மெய்கண்ட முதல்வரால் செய்யப்படுவது.

**போதாநந்தப் பொருளாம் மெய்காட்டும்:** மேலே கூறிய முறையால் பாசஞானம் எனப்படும் தத்துவ உணர்வுகளின் நீங்கிய ஆன்ம உணர்வு ஆகாயம் போன்று தன் அளப்பரிய வியாபக நிலை விளங்கப்பெறும்; அங்ஙனம் விளங்கும் ஆன்ம உணர்வில், ஆகாயத்தில் தோன்றும் ஞாயிற்றின் ஒளிபோன்று. முதல்வன் திருவருள் இன்ப ஒளியாய் வெளிப்படும். இவ்வெளிப்பாடு ஞாயிற்றின் தோற்றத்திற்கு முன் உளதாகும் அருணோதயம் போன்றது; இவ்வருளொளி, அரும்பு மலரும் பருவத்து அதனினின்று விரியும் மணம்போல, ஆன்மாவினின்றும் எழுந்து, யாங்கணும் நீக்கமற நிறைந்த உணர்வாய், பின் அவ்வான்மாவையும் தன்னகத்தே அடங்கக் கொள்வதாய் இருக்கும். அந்நிலையில் அப்பேருணர்வில் அடங்கி, அது தன்னை விழுங்கும்படி கொடுத்து முனைப்பின்றி நின்றால், அத்திருவருளுக்கு முதலாகிய சிவம் தூய பேரின்பப் பொருளாய் அநுபவப்பட்டு, அநுபவிக்கும் ஆன்மாவைத் 'தான் என ஒன்று இல்லை' எனும்படி, தன்வயப்படுத்தித் தானேயாய் நிற்கும். இது ஞாயிற்றின் உதயம் போன்றது. இங்குக் கூறிய அநுபவ நிலைகளைக் கீழ்வரும் அருள் மொழிகளால் தெளியலாம்.

'ஆறு றையும்நீத் ததன்மேல் நிலையைப்
பேறு அடியேன் பெறுமா றுளதோ' —கந்தர் அநுபூதி

'பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது' —திருமந்திரம்

'இன்றெனக் கருளி இருள்கடிந்(து) உள்ளத்(து)
எழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்' - திருவாசகம்

'யானு கியஎன்னை விழுங்கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே' —கந்தர் அநுபூதி.

'சேர்வார்தாமே தானாகச் செயுமவன்'
—திருஞான சம்பந்தர்

மேற்கூறியதிலிருந்து, முதற்பொருளை அநுபவமாய்க் காணலுறும் ஆன்மா, முன்னர் அதனை அறிவிக்கும் அறிவாய்ச் சோதியாகவும், பின்னர் ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமாகவும் உணர்ந்து அநுபவித்தலின் அதனைப் போத ஆநந்தப் பொருள் என்றார் இவ்வாசிரியர். முதற்பொருளின்போத உருவே திருவருள் எனவும், பரா சத்தி எனவும், உமை எனவும், முதல்வன் திருவடி எனவும் உயர்ந்த நூல்களுட் கூறப்படும்; போதம் - அறிவு, ஞானம். இனி அப்போதத்திற்கு முதலாக உள்ள ஆநந்த உருவே முதற்பொருள், பரமசிவம், சிவபிரான், இறைவன், சத்திமான் எனக் கூறப்படும். இவ்விருவகை அநுபவ நிலைகளும் முறையே துரிய அருள் நிலை எனவும், துரியாதீத ஆநந்தநிலை எனவும் வேறு வேறு வைத்து ஞான நூல்களுட் கூறப்படும். திருவைந்தெழுத்தில் முதற்பொருளைக் குறிக்கும் சிவ என்னும் இரண்டு எழுத்துக்களுள் வகாரம் அருளொளியையும், சிகாரம் அவ்வொளிக்கு முதலாகிய இன்புருவச் சிவத்தையும் குறிப்பவையாதல் நினைத்தற் குரியது.



இங்ஙனம் அநுபவப்படும் முதற்பொருள், அதுவரை ஆன்மா அறிந்துவந்த உலகப் பொருள்களின் முற்றிலும் வேறுபட்ட இயல்பினதாய், தோற்றக்கேடுகள் இன்றி நித்தமாய் உள்ளதாதலின், மெய் எனப்பட்டது. மெய்— மாறுதலின்றி, என்றும் உள்ள பொருள். உபநிடத வழக்கில் இப்பொருள் சத்(து) என்ற சொல்லால் குறிக்கப்படும். இம் மறை வழக்குப்பற்றித் திருவள்ளுவர் முதற்பொருளை *உள்ளது, செம்பொருள் என்னும் சொற்களால் ஆண்டுள்ளமை அறியத்தக்கது.

இம்முறையில் மெய்யைக் காட்டுபவர் மெய்கண்டார்; தாம் கண்ட பின்னன்றிப் பிறர்க்குக் காட்டல் கூடாமையின் மெய்காட்டும் மெய்கண்டாய் என்றார். அன்றியும், இத்தகைய ஞானபோதகம் சொல்நடை அன்றாய், இருந்த த(ன்)னை இருந்தபடி இருந்து காட்டுவதே ஆகலின், அவ்வாறு மாணாக்கரைக் காட்டுதற்கு ஏதுவாக மெய்யைக் கண்டு நிற்பவர் எனினும் பொருந்தும்.

பொய்காட்டா மெய்யா: மேற்கூறிய முறையால் மெய்ப் பொருளைக் காட்டக் கண்ட முத்தர்கள், தம்பழைய பழக்க விளைவு காரணமாக, மீளத் தத்துவ உணர்வுகளை தலைப் பட்டு மெய்ப்பொருட்காட்சியை இழத்தல் கூடும் அன்றோ? அவ்வாறு அவர் மீளப் பொய்யுணர்விற் புகுதா வகை முத்தி பஞ்சாக்கரம் எண்ணுதல், குருலிங்கசங்கம வழிபாடு என்பவற்றால் அவரை முத்திநெறியில் நிலைபெறுத்துதற்கு உடனிருந்து உபகரிக்கும் அருட்டிருமேனி உடையவர் என்னும் கருத்தால் மீண்டும் 'பொய்காட்டா மெய்யா'' என்றார். இங்கு மெய் என்றது தேசிக வடிவை. பசுவின் மலம் மற்ற மலங்களோடு வைத்து எண்ணப்படாததாய், தூயதாய், பிறமலங்களைப் போக்கும் அருமருந்தாதல் போல, ஆசாரியன் வடிவம் பிறவுயிர்களின் வினையால் வந்த உருவங்களோடு ஒப்பவைத்து எண்ணப்படாததாய், அருள்மய

* ஓர்த்து—திருக். 357.

மாய், மாயா உருவைப் போக்கவல்ல திருவுரு என்று உணர்தல் வேண்டும்.

**திருவெண்ணை:** திருவெண்ணெய் நல்லூர் என்பதன் மரூஉ; புலியூர் புலிசை என வழங்கப்படுதல் போல.

**சுத்தவினு:** உயிர்களின் அடிப்படை உணர்வு நிலைகளை மூன்று பெரு நிலைகளாகப் பகுத்துக் கூறுதல் மெய்ந்நெறி வழக்கு; அந்நிலைகள் காரண அவத்தைகள் எனப்படும். அவத்தை-நிலை. அவை முறையே கேவலம், **சகலம், சுத்தம்** எனப்படும். கேவலநிலை என்பது உயிர்கள் பிறப்புக்கண் வாராத, முன்நிலை. அது பிறப்பெய்தியுள்ள நம்மனோரால் அறியவாராது; ஆயினும் அன்றாடம் நமக்கு உண்டாகும் பேருறக்க நிலைபற்றி அதனியல்பு கருதி உணரப்படும். உறக்கநிலையில் நமது கருவிகரணங்கள் எல்லாம் ஓய்வு அடைந்து, நமக்குத் துணைபுரியாது நின்றுவிடுகின்றன. அதனால் நாம் அறிவு, செயல் இன்றி, ஒன்றும் தெரியவில்லை என, அறியாமையில் அழுந்திவிடுகின்றோம். அந்நிலையில் நம் இருப்பும் நமக்குத் தோன்றுவது இல்லை. உடம்பு உள்ளபோதே, உடம்பு உபகாரப்படாமையால், இத்தகைய அநுபவம் இருந்தால், உடம்பே இல்லாதபோது இன்னும் பேரிருளில்தானே நாம் அழுந்தியிருப்போம்? ஓர் உதாரணத்தை நோக்குவோம். நள்ளிரவு; விளக்குக்கள் அமைந்துள்ள ஓர் அறையில் இருக்கின்றோம்; அவை ஒவ்வொன்றாக அணைக்கப்படுகின்றன. எல்லா விளக்கும் அணைந்த நிலையில், நம் கண் எதையேனும் காணுமா? காணாது. கண் காணும் ஆற்றல் உடையதுதானே? ஆயினும் இருளில் அழுந்துதலால் காணுஞ்செயல் அற்றுவிடுகின்றது. இப்புறவிருள்போல அகவிருளும் உள்ளது; அதற்கு **மூலமலம், ஆணவம்** என்பவை பெயர்கள். நம் உடம்பு, உடம்பில் உள்ள மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம், புத்தி, அகங்காரம் முதலிய கருவிகள் ஆகிய எல்லாம் **விளக்குக்கள்** போன்றவை. உயிர் கண் போன்றது. கருவிகள் ஒன்றும் தொழிற்படாதபோது உயிர்



மலத்தில் அழுந்தி, இருளன்றித் தான் என ஒன்று இல்லையெனும்படி, **இருளேயாய்** நிற்கும். இங்ஙனம் கருவிகளைக் கூடாமல் இருளில் அழுந்தி நிற்கும் **அறியாமை** நிலையே உயிர்க்குக் **கேவலநிலை** எனப்படும். கேவலம்-தனிமை.

**இனி,** விளக்குக்கள் சுடர்விட்டு எரியும்போது கண் ஓரளவு காணும் ஆற்றல் உடையதாகின்றது. அதுபோல, உயிர் பருவுடல், நுண் உடல் எனப் பாகுபடும் உடம்போடு கூடிப்பிறந்து, இறந்து, இருவினைகளைச் செய்து, இன்பத் துன்பங்களை நுகர்ந்துவரும் நிலை **சகல நிலை** எனப்படும்.

கேவலநிலையில் உயிர்க்குச் சார்பாக உள்ளபொருள் அகவிருளாகிய மூலமலம்; சகல நிலையில் சார்பாக உள்ள பொருள் மாயை. நம் உடம்பு, அதன்கண் உள்ள அகப்புறக் கருவிகள், நாம் இயங்குதற்கு இடமாக உள்ள உலகம், உலகில் உள்ள நுகர்ச்சிப் பொருள்கள் என்னும் நான்கு வடிவில் புலப்பட்டு, இந்நான்கனுக்கும் காரணமாய் உள்ள பொருள் **மாயை** எனப்படும். மாயையும், மாயையின் காரியமாகிய உடம்பு முதலிய நான்கும் **விளக்கொளி** போன்றவை. இவற்றை உயிர் சார்தலினால் தன் அறியாமை ஒரு சிறிது நீங்கப் பெற்றுப் புறப்பொருள்களை அறிந்து, அவற்றில் அழுந்தி, இன்பத் துன்பமயக்கம் என்னும் மூவகை நுகர்ச்சியைப் பெற்றுவரும். மாயையின் காரியங்களுள் ஒன்று கலை; அதனோடு கூடி மாயா காரியங்களில் அழுந்தும் நிலை சகல நிலை அல்லது சகலாவத்தை எனப்பட்டது; சகலம் கலையோடு கூடியது. கேவலம் - **தனிமை**, அதாவது கலையோடு கூடாது தனித்து, மூலமலத்தில் அழுந்தியிருந்த நிலை. சகலம் என்பதைப் **பிறப்பு** நிலை எனவும், கேவலம் என்றதைப் பிறப்பின் வருதற்கு முன்னிருந்த அறியாமை நிலை எனவும் பொதுவாகக்கொள்ளலாம்.

இனி, உயிர்க்கு உள்ளதாகிய முடிந்தநிலை இவ்விரண்டும் அல்ல; ஒன்றும் அறியாமையாகிய **கேவலம்** அகன்று,

உலகப் பொருள்களைச் சுட்டி அறிந்து இன்பத் துன்ப மயக்கங்களை நுகர்ந்து வரும் சலகமும் அகன்று, முதல்வனது பேரருள் ஒளியில் முழுகி இன்புறும் நிலையே பேரா இயற்கை எனப்படும் முடிநிலை. இது சுத்தம் எனப்படும். மூலமலமாகிய இயற்கை அழுக்கும், மாயா மலமாகிய செயற்கை அழுக்கும், நீங்கப் பெற்றுத் திருவருளைச் சார்பாகப் பெறும் நிலை ஆதலின், சுத்தம் என்ப்பட்டது. சுத்தம் தூய்மை, இதுவே முத்திநிலை எனவும்படும். இராப்பகல் அற்றஇடம் என்பதும் இதுவே; கேவல நிலையை இரா எனவும் சகல நிலையைப் பகல் எனவும் கூறுவர்.

இச் சுத்த நிலையை உயிர் அணைவதற்கு ஏதுவாகிய வினாக்களையே ஆசிரியர் மனவாசகங்கடந்தார் மெய்கண்ட முதல்வர் திருமுன்பு விண்ணப்பிக்கப் போகின்றார்; ஆதலினால் சுத்தவினா, ஐயா! நீதான் கேட்டு அருள் என்றார்.

## நுதலிய பொருளின் வகை

**ஆறாறு தத்துவம் ஏ(து) ஆணவம் ஏ(து) அன்றேதான்**
**மாறா வினையேது? மற்றிவற்றின் — வேறாகா**
**நானேது? நீஏது? நாதன்நடம் அஞ்செழுத்துத்**
**தான்ஏது? தேசிகனே! சாற்று. (2)**

பொ-ரை: முப்பத்தாறாக எண்ணப்படும் தத்துவங்களின் இயல்புயாது? ஆணவத்தின் இயல்புயாது? தொன்று தொட்டு நீங்காமல் வரும் வினையின் இயல்புயாது? இனி இவற்றோடு கூடி இவையேயாய், நான் என நிற்கும் என் இயல்புயாது? என்னை உணர்த்த எழுந்தருளி வரும் உம் இயல்பு யாது? உயிர்களுக்குத் தலைவனாகிய முதல்வன் இயற்றும் திருக்கூத்தின் இயல்பு யாது? திருவைந்தெழுத்தின் இயல்பு யாது? தான் ஆதல் எனப்படும் பரமுத்தியின் இயல்பு யாது? அருட்குரவனே! இவற்றை எனக்குக் கூறியருள்க!



வி-ரை: தத்துவம் முதலிய சொற்கள் ஆகுபெயராய் அவ்வவற்றின் இயல்பின்மேல் நின்றமையின் ஏது என்னும் ஒருமை முடிபு கொண்டன. ஆசான் உரு அருள் உரு ஆதலின், நீ என்றது திருவருள்மேல் நின்றது.

தத்துவம் ஏது? ஆணவம் ஏது? வினை ஏது?-என்பவை மேலைப் பாட்டில் பொய்காட்டி என்றதன் வகை. இவை பாசம் அல்லது தளை என ஒன்றாய் அடங்கும்.

இனி, இவற்றின் வேறாகா நான் ஏது என்பது பொய்யகற்றி என்றதன் வகை; நீ ஏது? நாதன் நடம் (ஏது)? என்பவை போத ஆநந்தப் பொருளாம் மெய்காட்டும் என்றதன் வகை; அஞ்செழுத்து (ஏது)? தான் (ஆதல்) ஏது? என்பவை பொய்காட்டா மெய்யா என்றதன் வகை. இவற்றின்விரிவை மேல்வரும் பாட்டுக்களிற் காண்க.

## ஆசிரியர் இசைந்தருளல்

**உள்ளபடி இத்தை உரைக்கக்கேள் உன்றனக்கு**
**வள்ளலரு ளால்அன்று வாய்மலர்ந்த — தெள்ளியசீர்**
**ஆகமங்கள் சொன்ன அடைவிலே ஆநந்த**
**யோகம் நிகழ்புதல்வா உற்று. (3)**

பொ-ரை: சிவாநந்த நிலையை எய்துவிக்கும் சிவயோக நெறியில் பயிலும் மாணவகனே! நீ வினாவிய இந்த ஞான நெறியை உள்ளவாறு, சிவபிரான் முற்காலத்திலே அருள் காரணமாகத் திருவாய் மலர்ந்தருளிய-தெளிந்த பொருளையும், சிறப்பையும் உடைய ஆகமங்கள் உரைக்கும் முறையில் உனக்கு உரைப்போம். மனம் பொருந்திக் கேள்.

இதனை என்பது அன்பெறாது இத்தை என மரீஇயிற்று. இத்தை உள்ளபடி, ஆகமங்கள் சொன்ன அடைவிலே உன்றனக்கு உரைக்க, நீ உற்றுக்கேள் — எனமுடிக்க.

## ஆருறு தத்துவம்

### ஐம்பூதம்

**நாற்கோணம் பூமிபுனல் நண்ணுமதி யின்பாதி
ஏற்குமனல் முக்கோணம் எப்போதும் — ஆர்க்கும்
அறுகோணம் கால்வட்டம் ஆகாயம்; ஆன்மா
உறுகாயம் ஆர்இவற்றால் உற்று. (4)**

பொ-ரை: மண், புனல், அனல், கால், வான் என்னும் இவ்வைந்தும் பூதம் எனப்படும். இவற்றுள் மண் நாற்கோணத்தை வடிவாக உடையது; புனல் பாதி மதியின் வடிவை உடையது; அனல் முக்கோணத்தை வடிவாகக் கொள்ளும்; எப்போதும் (சலித்து) ஓசைசெய்யும் காற்று அறுகோண வடிவினை உடையது; ஆகாயம் வட்ட வடிவினது. பசு என நிற்கும் ஆன்மா வினைக்கீடாகப் பெறும் உடம்பு இப்பூதங்களின் சேர்க்கையால் அமைந்து உளதாகும்.

கால்-காற்று; ஆர்க்கும்-ஒலிக்கும்; காயம்-உடம்பு, இங்குப் பருவுடல். இது பூதங்களின் வடிவு கூறிற்று.

## பூதங்களின் நிறமும் எழுத்தும்

**பொன்பார் புனல்வெண்மை பொங்கும் அனல்சிவப்பு
வன்கால் கருமைவளர் வான்தூமம் — என்பார்
எழுத்து லவரயஅப் பாராதிக் கென்றும்
அழுத்தமதாய் நிற்கு மது. (5)**

பொ-ரை: மண் பொன்மை நிறமுடையது; புனல் (விளங்காத) வெண்ணிறம் உடையது; மேலோங்கும் இயல்புள்ள அனல் செந்நிறம் உடையது; வலிய காற்று கருநிறம் உடையது; எங்கும் பரவியுள்ள ஆகாயம் புகை நிறம் உடையது—என இவற்றின் இயல்பை யோகக் காட்சியாற் கண்டுணர்ந்தோர் கூறுவர். மண் முதலாய



வற்றை நீங்குதலின்றி உடனின்று தொழிற்படுத்தும் பீஜ எழுத்துக்கள் முறையே ல, வ, ர, ய, ஹ என்னும் மெய்யெழுத்துக்களாம். ஹ என்பது தமிழின் அ ஆயிற்று.

வி-ரை: இதனால் பூதங்களின் நிறமும், அவற்றின் காரண நிலையாகிய காரக சத்திகளைச் செலுத்துவனவாகிய மூல எழுத்துக்களும் கூறப்பட்டன.

மூல எழுத்துக்கள் பற்றிச் சிறிது விளக்கம் தருதல் பொருத்தமாம்; நாம் உலகம் என்று சொல்வது நம் உடம்பின் சூழ்நிலையாய், அதன் போக்குவரவிற்கும் வளர்தல் தேய்தலுக்கும் சார்பாக உள்ள பொருள்களையேயாம். இப்பொருள்களின் உண்மையை மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள் வழியாகத்தான் உணர்கின்றோம். இக்காரணம்பற்றி, இப்பொறிகள் வாயில்கள் எனப்படும். வாயில்-வழி.

உலகத்துப் பொருள்கள் பலவகையான அலைவுகளை (vibration) இடையறாது எழுப்புகின்றன. இந்த அலைவுகள் நம் உடம்பை இடையறவின்றித் தாக்குகின்றன. இவற்றுள் ஐந்து வகையான அலைவுகளை—சில எல்லைகளுக் குட்பட்டவற்றை—மெய், வாய், கண், மூக்கு, செவி, என்னும் இடங்களில் உள்ள நரம்பின் முடிவுகள் எதிரிட்டு வாங்கி நம் மன உணர்விற்கு வேறு வேறு பதிவுகளாகத் தர, நாம் அவற்றைச் சுவை என, ஒளி என, ஊறு என, ஓசை என, நாற்றம் என உணர்கின்றோம். எனவே, நம் அறிவு புறப்பொருள்களை அறிவது ஐம்பொறிகள் வாயிலாக நிகழ்கிறதென்பதும், மேற்கூறிய அலைவுகளுக்கு மூலமாக (பற்றுக்கோடாக) உலகப் பொருள்களை நாம் கருதிக் கொள்கிறோமே தவிர, நம் அறிவு நேரே எப்பொருளையும் தலைப்பட்டு அறியவில்லை என்பதும் உணரப்படும். ஆயினும் பொறிகளில் தாக்கும் அலைவுகளின் வேறுபாடுகளுக்குத் தக அவ்வலைவுகளின் முதல்களை வேறு வேறாக, காலம் இடம் காரண காரிய இயைபு என்னுங் கருத்துக்

களோடு புணர்த்து உள்ளத்திற் கொள்ளுகிறோம். இதனால் பொருள்கள் புலப்படும் உருநிலையும், புலப்படா அருநிலையும் உடையன என்பது விளங்கும். இனி, ஒவ்வொரு பொருளும், புலப்படாத அருநிலையினின்றும் புலப்படும் உருநிலையை அடையும்போது, தனித் தனியான அசைவு வேறுபாட்டை உடையன ஆகும்; அன்றியும், ஒலியெனச் செவிக்குப் புலனாவது அசைவேயன்றிப் பிறிதன்று அல்லவா? ஒரு பொருளின் அசைவால் உண்டாகும் காற்று அலை, நம் அகஞ் செவியில் உற்று, உணரப்படும்போது, அதனை ஒலியாக நாம் உணர்கின்றோம். உண்மையில் எல்லா அசைவும் ஒலியாம்; எல்லா ஒலியும் அசைவாம். ஆயினும், சில அசைவுகளில், அசைவு மாத்திரமன்றி ஒலியும் உடன் புலப்படும், சிலவற்றில் அசைவு மட்டும் புலப்படும்; வேறு சிலவற்றில் ஒலி புலனாகும்; அசைவு புலனாகாது. யோகிகளுக்கு எத்துணை நுண்ணிய இயக்கங்களையும் உணரும் ஆற்றல் பெருகியிருத்தலின், அவர்கள் நாற்றத்தின் செறிவால் மண் தோன்றும்போதும் சுவையின் செறிவால் நீர் தோன்றும்போதும், ஒளியின் செறிவால் அனல் தோன்றும்போதும், ஊற்றின் செறிவால் காற்றுத் தோன்றும்போதும், ஓசையின் செறிவால் ஆகாயம் தோன்றும்போதும் உண்டாகும் அலைவு இயக்கங்களால் உண்டாகும் மூல ஒலிகளை உணர்கின்றார்கள். அவ்வாறு உணர்ந்து வெளிப்படுத்திய ஒலிகளே அவ்வப் பொருளின் மூல எழுத்து (பீஜ அக்ஷரம்) எனப்படும். இவ்வாற்றால் எல்லாப் பொருள்களுக்கும் மூல ஒலிகள் உள்ளன. அவையே அவ்வவற்றிற்குரிய மந்திரங்களாம் என்பது உணரப்படும்.

ஒருவர் பாடும் பாட்டை இசைத் தட்டில் பதிவித்துக் கொள்ளுதலும், இசைத்தட்டினின்றும் அப்பாட்டை மீள எழுப்புதலும் நாம் அறிந்த உண்மை அல்லவா? அதுபோல அவ்வப் பொருளின் விளைவைத் தோற்றுவித்தற்கு மூல ஒலிகளைக் கணித்தல் போதும்.



பொதுவாக யோக நூல்களில் குண்டலிசத்தி எனப்படுவது சித்தாந்த நூல்களில் சுத்தமாயை அல்லது மாமாயை எனப்படும். இது முதல்வன் திருவருள் நேரே பதிந்து தொழிற்படுத்துதற்கு நிலைக்களமாக உள்ள பொருள். அசுத்தமாயை எனப்படும் பொருள் எல்லாம் இதனால் இயக்கப்படும். இது முதற்கண் சாந்தியாதீத கலை, சாந்தி கலை, வித்தியா கலை, பிரதிட்டா கலை, நிவிருத்தி கலை என ஐந்து பெரும் பிரிவாக நின்று எல்லா எழுத்துக்களையும், பதங்களையும், மந்திரங்களையும், தத்துவங்களையும், புவனங்களையும் அகப்படுத்தி நிற்கும். இவ்வைந்து கலைகளாலும் முறையே நிலைக்களமாகக் கொள்ளப்பட்டு, அவற்றின் தூல ரூபமாக அமைவன வான் முதலிய ஐம்பூதங்கள் ஆதலினால் இங்குக் கூறும் வடிவம், நிறம், எழுத்து முதலியவை அக்கலைகட்கும் ஒப்பக் கூறப்படும். அன்றியும் இங்கு உணர்த்தப்பட்ட மூல எழுத்துக்கள், பூதசத்தி முதலியவற்றில் பிரயோகமாகும்போது, அவ்வக் கலைகளில் அடங்கும் அங்க மந்திரங்களின் மூல எழுத்துக்களின் இடையே வைத்துக் கணிக்கப்பெறும் என்பது உணரத் தக்கது.

நிவிருத்தி கலைக்குரியதாய் மண்ணிற்கும் கொள்ளப்படும் பீஜம் ஹ்லாம் என்பது; இது ஹ்ல்ஆம என—ஹாம் என்னும் இதய பீஜத்தின் நடுவில் வைக்கப்பட்ட லகார மெய்யாதல் அறிக. பிறவும் இவ்வாறே கண்டுகொள்க.

சிவ தீக்கைப் பேறும், உடையவர் பூசையும் உடையார்க்கே இந்நூல் முழுப்பயன் அளிப்பது ஆகலின், அன்னோர்க்கு நினைப்பூட்டும் அளவில் இக்குறிப்புத் தரப்பட்டது.

"பாதம் ஒன்றொடு நிவிர்த்தியால் தரைக்கண்
பதமி ரண்டொடு பதிட்டையால் புனற்கண்
பாதம் நான்கொடு வித்தையால் கனற்கண்
பதங்கள் எட்டொடு சாந்தியால் வளிக்கண்

பாதம் ஒன்பத ளெடுவெளிப் பரப்பில்
பகரும் சாந்தியின் அதீதமாங் கலையால்
பாதம் ஆயிரத் தொடுபர வெளிக்கண்
பயிலும் அக்கரத் தனிமுதற் பரையை''

என வரும் காஞ்சிப் புராணச் செய்யுள் கருதத் தக்கது. பூதங்களை மூல எழுத்து உருவமாய் உள்ள கலைகளும், கலைகளைத் திருவருளும் செலுத்தும் என உணர்ந்து கொள்க.

## பூதங்களின் அடையாளம்

**குறிகுலிசம் கோகநதம் கொள்சுவத்தி குன்று
அறுபுள்ளி ஆரமுத விந்துப்—பிறிவின்றி
மண்புனல்தீக் கால்வானம் மன்னும் அடைவேயென்று
ஒண்புதல்வா ஆகமம்ஓ தும். (6)**

பொ-ரை: நல்லறிவுள்ள மாணவனே, மண் குலிசத்தையும் (வஜ்ரம்), புனல் தாமரையையும், தீ சுவத்திகத்தையும் (குறுக்கு), காற்றுக் குறைவில்லாத அறு புள்ளியையும், வானம் சுவை நிறைந்த அமுதத் துளியையும் அடையாளமாகக் கொண்டு நிலைபெறும் என்று சிவாகமங்கள் கூறும் என உணர்க!

இது பூதங்களின் அடையாளம் கூறிற்று.

## பூதங்களின் தெய்வமும் தொழிலும்

**பாராதி ஐந்துக்கும் பன்னும்அதி தெய்வங்கள்
ஆரார்? அயனாதி ஐவராம்—ஓரோர்
தொழிலவர்க்குச் சொல்லுங்கால் தோற்றமுதல் ஐந்தும்
பழுதறவே பண்ணுவர்கள் பார். (7)**

பொ-ரை: மண் முதலிய ஐந்து பூதங்களுக்கும் ஆகமங்கள் கூறும் அதிதெய்வங்கள் யார், யார்? எனின்; அயன், மால், அரன், பேரீசன், சதாசிவன் என்னும் ஐவர் ஆவர். இவர்தம் சிறப்புத் தொழிலைக் கூறின், தோற்றம், நிலை, இறுதி, மறைப்பு, அருள் என்னும் ஐந்தையும் இவர்கள் முறையே குற்றமறச் செய்வார்கள் என அறிக.

இது பூதங்களின் அதிதெய்வங்களையும், அவர்தம் சிறப்புத் தொழில்களையும் கூறிற்று.



## ஐவர் தொழில்

**படைப்பன் அயன்அளிப்பன் பங்கயக்கண் மாயன்
துடைப்பன் உருத்திரனும் சொல்லின்—திடப்பெறவே
என்றும் திரோபவிப்பர் ஈசர் சதாசிவரும்
அன்றே அநுக்கிரகர் ஆம். (8)**

பொ-ரை: அயன் படைப்பன்; தாமரைக் கண்ணன் எனப்படும் மாயோன் அளிப்பன்; எடுத்தோதுமிடத்து, உருத்திரனும் துடைப்போன் ஆம்; ஈசர், (உயிர்) மாறா நன்னிலை பெறுதற்குத் தக்கதாகும்படி, என்றும் மறைத்தல் தொழிலைச் செய்வர்; சாதாசிவரும் அநாதியே அருளுந் தொழிலை உடையவர் ஆவர்.

வி-ரை: இப்பாட்டு மேலே உய்த்துணரும்படி தொகுத்துச் சுட்டிய கருத்தையே வெளிப்படையாக எடுத்தோதிற்று.

திடம் பெறவே என்பது எதுகை நோக்கி வலிந்து நின்றது; திடம் என்றது உறுதி நிலையாகிய வீட்டு நிலையை.

படைத்தலாவது உடல், கருவி, நிலன், நுகர்ச்சிப் பொருள் எனப் பாகுபடும் உலகத்தை அவ்வவற்றின் முதற் காரணத்தினின்றும் தோற்றுவித்தல்; அளித்தலாவது அங்ஙனம் தோன்றி நிற்கும் உலகு மீள ஒடுங்கும் வரை அவ்வச் செயல்களில் நிற்குமாறு செய்தல்; துடைத்தலாவது தோன்றிச் செயற்படும் உலகை மீளவும் காரண ரூபமாய் ஒடுங்கும்படி செய்தல். இம்மூன்று செயலும் அறிவில் பொருள்களின்கண் நிகழ்வன.

இனி, திரோபவித்தல் என்றது மறைத்தலை. அஃதாவது உயிர்களைப் படிமுறையான் வளர்ச்சி எய்துமாறு செய்தல். ஓர் உயர்ந்த உண்மையை உணர்த்தக் கருதும் ஆசிரியன், முன்னர் மாணாக்கன் அறியாமையைப் படிமுறையான் நீக்கி உணர்வைப் பெருகுமாறு செய்வன்; பின், மாணாக்கனது உணர்வு தான் கூறும் உண்மையைக் கொள்ளும் பக்குவம் எய்தும்போது, தான் உணர்த்தக் கருதிய உண்மையை உணர்த்துவன். இது போன்றதே இறைவன் உயிர்களுக்கு உபகரிக்கும் முறையும். ஆசிரியன் முன்னர் மாணாக்கன் உணர்வை மலர்விக்க முயலும் முயற்சி போல்வது இறைவன் மேற்கொள்ளும் மறைத்தற்றொழில்; இதுவே உயிர்களைப் பிறப்பிறப்பின் உய்த்து உலக நுகர்ச்சியை எய்துமாறு செய்தலாம்: இஃது உயிரின் கண் நிகழ்வது; இறைவன் உயிர்க்குயிராய் மறைந்து நின்று உயிர்களை நடாத்துவதாம். இது பந்தம் என்றும் கூறப்படும். இதன்கண் படைத்தல், அளித்தல், துடைத்தல் என முன் கூறிய முத்தொழிலும் அடங்கும். இதனைச் செய்பவர் ஈசர் (ஆள்பவர்) அல்லது பேரீசர் (மகேசர்) எனப்படுவர். இவர் செயலில் முன் கூறிய முத்தொழிலும் அடங்குதலின், அவற்றைச் செய்யும் அயனும், மாயனும், உருத்திரனும், ஈசர் ஆணைவழி நிற்போர் ஆவர். இனி அநுக்கிரகம் என்றது உயிரை மாசு நீக்கித் தான் ஆம் வண்ணம் ஆட்கொள்ளல்; இஃது அருளல் எனப்படும். ஆசிரியன் பக்குவம் எய்திய மாணாக்கனுக்குத் தான் கூறக் கருதிய பேருண்மையை இனிது உணர்த்துவது போல்வது. இச்செயலே இறைவனது முடிநிலைச் செயலாம்; அஃதாவது வீடுபேறு நல்குவது ஆம். இதனைச் செய்பவர் சதாசிவர் ஆவர்.

மேற்கூறியதிலிருந்து இவ்வைந்தொழிலும் பந்தம், வீடு என இரண்டாய் அடங்கும் என்பது விளங்கும். 'பந்தம் வீடு தரும் பரமன்' எனப் பெரிய புராணத்தும், 'பந்தமு மாய் வீடு மாயினருக்கு' எனத் திருவாசகத்தும் வருதல் காண்க.



ஐந்தொழிலை முத்தொழிலில் அடக்கிக் கூறுவது மறை வழக்கு; அவ்வாறு அடக்கும்போது மறைத்தல் அளித்தற் கண்ணும், அருளல் அழித்தற்கண்ணும் அடங்கும்; இவ்வாறாகலின், அழித்தலைச் செய்யும் அரன் உருவே முதல் உரு எனப்படும்; ஏனை இருவரும் அரனாற் படைக்கப் பெற்று, அவன்றன் ஆணைவழி நிற்பர் என்பது விளங்கும்.

## பூதங்களின் குணமும் தொழிலும்

மண்கடின மாய்த்தரிக்கும்; வாரிகுளிர்ந் தேபதமாம்;
ஒண்கனல்சுட்(டு) ஒன்றுவிக்கும்; ஓவாமல்—வண்கால்
பரந்துசலித் துத்திரட்டும்; பார்க்கில்ஆ காயம்
நிரந்தரமாய் நிற்கும் நிறைந்து. (9)

பொ-ரை: ஆய்ந்து அறியின், மண் திண்மைக் குணமும் பொருள்களைத் தாங்கும் தொழிலும் உடைத்து; நீர் குளிர்ச்சிக் குணமும் பொருள்களை மென்மைப்படுத்தும் தொழிலும் உடைத்து; ஒளியுள்ள அனல் வெம்மைக் குணமும் பொருள்களை ஒன்றுவிக்கும் தொழிலும் உடைத்து; வளப்பமுள்ள காற்று ஓழிவின்றிப் பரவி யியங்குங்குணமும் பொருள்களைத் திரட்டும் தொழிலும் உடையது; ஆகாயம் வெளியாதலாகிய குணமும் எப் பொருட்கண்ணும் ஊடுருவி நிறைந்து நிற்கும் தொழிலும் உடைத்து.

இது பூதங்களின் குணப் பண்பும் தொழிற் பண்பும் கூறிற்று. பூதத்தின்கண் உள்ளதாய் உணரப்படும் இயல்பு குணமெனவும், அதனால் பிறபொருட்கண் நிகழும் விளைவு தொழில் எனவும் கூறப்பட்டன.

## ஐம்புலன்

உள்ளபடி மாபூதம் ஒதினேம் உன்றனக்குக்
கள்ளமிகும் ஐம்புலனும் கட்டுரைக்கின் — மெள்ளவே
ஓசை பரிசம் உருவம் சுவைநாற்றம்
ஆசைதரும் ஐப்புலனே ஆம். (10)

பொ-ரை: இதுவரை உனக்குப் பெரும் பூதங்களின் இயல்பை—அவற்றின் வடிவு, நிறம், மூல எழுத்து, அடையாளம். அதிதெய்வம், அதிதெய்வங்களின் சிறப்புத் தொழில், குணப் பண்பு, தொழிற் பண்பு என விரித்து—உள்ளவாறு அன்பாற் சொன்னோம். இனி மனத்தைக் கவரும் இயல்புள்ள ஐம்புலன்களின் இயல்பை எடுத்துக் கூறின், அவை ஓசை, ஊறு, உரு, சுவை, நாற்றம் என்பவை ஆம்.

வி-ரை: புலன் என்பவை பொறிகளால் அறியப் படுபவை; அவை விடயம் எனவும் கூறப்படும். சைவ சித்தாந்தத்தில் குணங்களின் கூட்டமே பொருள் (திரவியம்) எனக் கொள்ளப்படும். ஓசை என்பது வல்லோசை மெல்லோசை என வேறுபாடு உடையதாய் அறியப்படும் நிலையில் புலன் எனப்படும்; அதுவே அவ் வேறுபாடின்றிப் பொதுமையில் ஆற்றல் மாத்திரமாய் அடங்கி நிற்கும் நிலையில் சத்த தன்மாத்திரை எனப்படும்; இது ஆகாயத்தைத் தோற்றுவிக்கும் காரணமாய்ச் சூக்கும பூதம் எனப்படும்.

இனி, காற்றில் ஓசையும், ஊறும் பொறிகளால் உணரப்படுகின்றன. இவை புலன்களாம். காற்றிற்கு முதற் காரணமாய், ஓசையும் ஊறுமாய்—வல்லோசை, மெல்லோசை தட்பம் வெப்பம் என அறிய வாராது ஓசை ஊறு மாத்திரமாய்ச் சூக்குமமாய் நிற்பது பரிச தன்மாத்திரை எனப்படும். இவ்வாறே பிற பூதங்களின் காரணமும் ஆம். அவை தம்மில் ஒவ்வொரு குணத்தை ஏற்றமாக உடையன; ஆயினும் அவ்வவற்றுக்குரிய சிறப்புக் குணம் பற்றி உருவ தன் மாத்திரை, இரத தன்மாத்திரை, கந்ததன்மாத்திரை என வழங்கப்படும். இவ்வாறு புலனுக்கும் சூக்கும பூதங்களாகிய தன்மாத்திரைகளுக்கும் பெயர் ஒன்றேயாயினும் வேறுபாடு அறிந்து கொள்ளத் தக்கது. தத்துவங்கள் என் எண்ணப்படுவன தன்மாத்திரையாகிய சூக்கும பூதங்களேயாயினும், குண



மாதல் ஒப்புமை பற்றியும், உணர்த்துதல் எளிமை பற்றியும் புலன்களையே கூறினர்.

## அறிவுப் பொறி ஐந்து

ஞானேந் திரியங்கள் நன்று உரைக்கக்கேள்
ஊன மிகுபூதம் உற்றிடமா—ஈனமாம்
சத்தாதி யைஅறியும் தானம் செவிதோல்கண்
அத்தாலு மூக்கென் றறி. (11)

பொ-ரை: அறிவுப் பொறிகளின் இயல்பை நன்றாக உரைக்கின்றேன்; கேள்: அவை ஊனம் மிகுந்த சூக்கும பூதங்களை இடமாகக் கொண்டு இழிந்த ஓசை முதலிய புலன்களை அறியும். அவை தங்கித் தொழிற்படும் இடம் முறையே செவியும், தோலும், கண்ணும், நாவும், மூக்கும் என்றறிந்துகொள். தாலு-நா; அத்தாலு-அந்த நா.

வி-ரை: செவியில் ஓசையை அறிவதாய் உள்ள நரம்புகளின் முனையே செவிப்பொறியாகும்; இவ்வாறு தோல், கண் முதலிய இடங்களில் உள்ள நரம்புகளின் முனையே அவ்வப் பொறி என்று உணர்க. தமிழில் செவி, தோல் முதலிய உறுப்புக்களின் பெயர்களே இடவாகு பெயராய், அவ்வவ் விடங்களில் உள்ள அறிவுப் பொறிகளைக் குறிக்கும். பொறி, இந்திரியம், வாயில் என்பவை ஒரு பொருட் சொற்கள். ஒவ்வொரு பொறியைப்பற்றி ஆராயும்போது பொறி, அப்பொறி தன் செயலைச் செய்தற்கு உடனின்று வலியைத் தரும் சூக்கும பூதம், அவ் விரண்டற்கும் இடமாக உள்ள உறுப்பு என மூன்றாகப் பகுத்துணர்தல் வேண்டும். பொறி தேரை ஊர்வான் போன்றது; தன்மாத்திரையாகிய சூக்கும பூதம் தேர் போன்றது; உறுப்பு தேருக்கு நிலைக்களனாகிய நிலம் போன்றது; சோத்திரம் சத்த தன்மாத்திரையைச் சார்பாகவும், செவியை இடமாகவும்கொண்டு ஓசையாகிய புலனை அறியும்; சட்சு உருவதன்மாத்திரையைச் சார்பாக

வும் கண்ணை இடமாகவும் கொண்டு ஒளியாகிய புலனை அறியும்; துவக்கு பரிசதன்மாத்திரையைச் சார்பாகவும் தோலை இடமாகவும் பொருந்தி ஊறு என்னும் புலனை அறியும்; சிங்நுவை (ஜிஹ்வா) இரததன்மாத்திரையைச் சார்பாகவும் நாவை இடமாகவும் கொண்டு சுவையாகிய புலனை அறியும்; ஆக்கிராணம் கந்த தன்மாத்திரையைச் சார்பாகவும் மூக்கை இடமாகவும் கொண்டு நாற்றம் என்னும் புலனை அறியும் என அறிதல் வேண்டும். சோத்திரம் முதலிய இவை பொறிகளுக்கு வடமொழிப் பெயர்கள்.

## ஐம்புலனை அறியுமாறு

வானிடமா நின்றுசெவி மன்னும் ஒலியதனை;
ஈனமிகுந் தோல்கால் இடமாக—ஊனப்
பரிசந் தனைஅறியும்; பார்வையிற்கண் அங்கி
விரவிஉரு வங்காணு மே. (12)

நன்றாக நீரிடமா நாஇரதம் தான்அறியும்;
பொன்று மணம்மூக்குப் பூவிடமா—நின்றறியும்;
என்றேதும் அன்றே இறைஆ கமம்இதனை
வென்றார்சென் றார்இன்ப வீடு. (13)

இவற்றின் பொழிப்பை மேலுரைத்தமை கொண்டு உணர்ந்துகொள்க. இவற்றால் தன்மாத்திரை எனப்படும் சூக்கும பூதங்களும் உடன் உணர்த்தப்பட்டன. 15 ஆம் பாட்டினும் உணர்த்தப்படுதல் காண்க.

## தொழிற்பொறிகள் ஐந்து

கண்ணுதல்நூல் ஓதியிடும் கன்மேந் திரியங்கள்
எண்ணும்வச னதிக் கிடமாக — நண்ணியிடும்
வாக்குப்பா தம்பாணி மன்னு குதம்உபத்த
மாக்கருதும் நாளும் அது. (14)



இ-ள்: வெளிப்படை. சிவாகமம் கூறும் தொழிற் பொறிகள் பேச்சு முதலிய தொழில்களுக்குக் கருவிகளாகப் பொருந்தும். அவ்வாகமம் அவற்றை வாக்கு முதலாகக் கருதுவிக்கும் என்க.

## தொழிற்பொறிகளின் செயல்

வாக்காகா யம்இடமா வந்துவச னிக்கும்;கால்
போக்காரும் காற்றிடமாப்; புல்கிஅனல் — ஏற்கும்
இடும்கை குதம்நீர் இடமா மலாதி
விடும்; பார் இடம்உபத்தம் விந்து. (15)

பொ-ரை: கழுத்து, கால், கை, எருவாய், கருவாய் என்னும் உறுப்புக்களை இடமாகக் கொண்டுள்ள வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம் என்னும் தொழிற்பொறிகள் ஐந்தும் முறையே உரையாடலும், போக்குவரவு புரிதலும், இடுதல் ஏற்றல் செய்தலும், மலமும் நீரும் விடுதலும் விந்துவிட்டு இன்பஞ்செய்தலும் ஆகிய தொழில்களை உடையவை ஆகும். இப்பொறிகள் தம்தம் தொழில்களைச் செய்தற்குச் சார்பாக நின்று வலி செய்யும் சூக்கும பூதங்கள் முறையே ஆகாயமும், காற்றும், நெருப்பும், நீரும், நிலனும் ஆம்.

## அந்தக்கரணம் நான்கு

அந்தக் கரணம் அடைவே உரைக்கக்கேள்
அந்தமனம் புத்தியுடன் ஆங்காரம் — சிந்தையிவை
பற்றியது நிச்சயித்துப் பல்கால் எழுந்திருந்தங்(கு)
உற்றதுசிந் திக்கும் உணர். (16)

பொ-ரை: அகக்கருவிகள் நான்கையும் அவை தொழிற்படும் முறையில் சொல்கிறோம்; கேள். அவை மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் எனப் பெயர் பெறும். மனம் வாயில்களால் அறியப்பட்டதொன்றனைப் பற்றும்; மனம்

பற்றியதனைப் புத்தி இன்னது எனத் துணியும்; ஆங்காரம் முன்னும் பின்னும் யான் இதனைச் செய்வல் என முயற்சி வடிவத்தில் முந்தும்: சித்தம் இம்மூன்றன் செயலாலும் இன்பத் துன்ப மயக்க உருவத்தில் வரும் வாயில்களின் பயனைக் கவர்ந்து அவ்வவ்வண்ணமேயாய் நினைவு வடிவமாய் இருக்கும். இவற்றின் உண்மையை இவ்வாற்றால் உணர்ந்துகொள்.

## ஆன்ம தத்துவம் கூறியவாறு

ஓதியிடும் நாலாறும் உற்றான்ம தத்துவமென்(று)
ஆதி அருள்நூல் அறையுங்காண் — தீதறவே
வித்தியா தத்துவங்கள் தம்மை விளம்பக்கேள்
உத்தமனே நன்று உனக்கு. (17)

பொ-ரை: மேலே கூறிய பூதம் ஐந்து, தன்மாத்திரை ஐந்து, அறிவுப் பொறி ஐந்து, தொழிற்பொறி ஐந்து, அகக் கருவி நான்கு என்னும் இருபத்துநான்கினையும் இறைவன் அருளிய ஆகமங்கள் உயிர்க்கு (நுகர்ச்சியாக) உற்ற ஆன்ம தத்துவம் என்று ஒரு கொத்தாக வைத்து உரைக்கும்; இனி, அடுத்து விளக்குதற்குரிய வித்தியா தத்துவங்களின் பெயரையும் இயல்பையும் குற்றமறக் கூறுகின்றோம் கேள். உற்ற என்பதில் அகரம் தொகுத்தல்.

## ஆன்ம தத்துவம்

வி-ரை: ஆன்மா என்பது உடம்புதோறும் நான் என்னும் - தன்னுணர்வுக்கு (self-consciousness) உணர்வுக்கு விடயமாவதாய் உள்ளதே ஆம். அவ்வுணர்வு விளங்கும் போது அறிவு, விழைவு, முயற்சி (அறிவு, இச்சை, செயல்) என மூவகைப்பட விளங்குகின்றது. அம்மூன்றனுள் விழைவு எனப்படுவது முயற்சியின் கூறாய் அடங்குதலின், அறிவு, செயல் என்னும் இரண்டுமே நமது பருவுடலில் விளங்க உணரப்படுகின்றன. அவற்றுள் அறிவு, கேட்டல், உறுதல், காண்டல், சுவைத்தல், மோத்தல் என ஐவகைப்பட நிகழ்தல் தெளிவு. இவை ஐந்தாக அடங்கவே, நம் உடம்பில் வெளிப்படும் செயலும் ஐந்தாக வகை செய்து கொள்ளப்பட்டன. இதனால், அறிவுப்பொறி ஐந்து, தொழிற்பொறி ஐந்து எனப் புறக் கருவிகளைப் பத்தாக எண்ணியதன் காரணம் நன்கு விளங்கும். இனி, அறிவுப் பொறி ஐந்தனாலும் அறியப்படும் பொருள்கள் ஐந்தாகலின், அவை புலன் என வைத்து எண்ணப்பட்டன. இப் புலன்கள் குணமாக அமைதலின், இவற்றின் பற்றுக்கோடாக உள்ள குணிகள், ஐம்பூதங்கள் என வேறு வைத்தெண்ணப்பட்டன.



இனி, உலகப் பொருள் உணர்வுக்கு அறிவுப் பொறிகள் ஐந்துமே வாயிலாக அமைந்தாலும், இவ்வாயில்களால் வரும் உணர்வுகளை இயைத்து இணைப்புச் செய்தல், இவற்றின் வேறாக அகத்தே உள்ள கருவிகளின் செயலாக அமைகிறது. அக்கருவிகளே மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என்பவை. பொறிகள்மூலம் வரும் உணர்வு, வாயிற் காட்சி யுணர்வு (sensation) எனப்படும்.

அஃது "இஃது ஒருபொருள் தோன்றா நின்றது" எனப் பொருளின் இருப்பு மாத்திரம் விளங்கி நிருவிகற்பமாக நிகழ்வது ஆகும். அந்நிலையில், எதிர்ப்பட்ட பொருளை இன்னது என்று சிறப்பாக அறிவதில்லை; உளது என்னும் அளவில் பொதுவாகவே அறிகிறோம்.

இனி, இப்பொதுக் காட்சி நிகழ்ந்தபின், மனம், ஆங்காரம், புத்தி என்னும் மூன்று அகக் கருவிகளால் சிறப்புக் காட்சி உண்டாகின்றது. இக்காட்சி உணர்வு இஃது இன்னது என்னும் வடிவில் நிகழ்வது; மொழி வடிவில் அமைவது: (1) இவன் முருகன், (2) இவன் மகன், (3) இவன் கரியன், (4) இவன் கவிஞன், (5) இவன் செல்வன் என்றாற்போல எதிர்ப்பட்டதொரு பொருளை, அதன் (i) பெயர், (ii) இனம், (iii) குணம், (iv) செயல், (v) உடைமை என்னும் ஐந்தனுள் ஒன்றாலும் பலவாலும்

சிறப்பித்து உணரும் உணர்வு. இக்காட்சி சவிகற்பக்காட்சி எனவும் மானதக் காட்சி எனவும் வழங்கப்படும். இதன் கண், பொறிகளால் உற்ற முதற்பதிவைப் பற்றி முன்னைய அநுபவங்களோடு ஒப்பிட்டு, இஃது இன்னதாகலாம், இன்னதாகலாம் என்னும் சங்கற்பமும், இதுவோ அதுவோ என இரட்டுற நிற்கும் ஐயமும் முதற்கண் நிகழும்; இச் சங்கற்ப விகற்பங்களுக்குக் கருவி மனம்; பின், இதனை இன்னதெனத் துணிவேன் என்னும் எழுச்சி உண்டாகும். இவ்வெழுச்சி ஆங்காரத்தின் செயலாகும். பின், புத்தி அதனை இன்னது என நிச்சயித்துணரும். இந்த நிச்சய உணர்வு வினைக்கீடாக நிகழும். அதாவது, எதிர்ப்பட்ட பொருளை உறவாக, அல்லது பகையாக அல்லது நொதுமலாகக் கொள்ளும் வேறுபாடு புத்தியின் முன்னைய பழக்கம் பற்றி உள்ளதாவது. அவ்வேறுபாட்டினால், பொருளைச் சவிகற்பமாக உணர்ந்த புத்தி, இன்பம், துன்பம், மயக்கம் என்னும் மூன்றனுள் ஒரு குணமாகப் பரிணமிக்கும். இவ்வின்பத்துன்ப மோக மயக்கங்களில் ஆன்மா அழுந்துவதே தன்வேதனைக் காட்சி எனப்படும். இங்கு இஃது இன்பம், இது துன்பம், இது மயக்கம் என உணரவருவதாய்ப் புத்தி தத்துவத்தைக் கொள்கலமாய் உடையதாய் நிற்பது மூலப்பகுதியின் விருத்தி எனப்படும் குணமாம். ஆன்மா அக்குணவகைகளைத் தனக்கு வேறாகச் சுட்டாது, அவையே தானாய் அழுந்தி யான் இன்புற்றேன்; யான் துன்புற்றேன்; யான் மயங்கினேன் எனப் பின்னர் வகுத்துக் கூறுதற்கு ஏதுவாக அங்கு நிகழும் உணர்வே தன் வேதனை உணர்வு; நினைவு மாத்திரமாய் உள்ள இவ்வுணர்வைப் பயப்பது மூலப்பகுதியே ஆம். அந்நிலையில் அம்மூலப்பகுதி சித்தம் எனப்படும். மூலப்பகுதி என்னும் பெயர் புத்தி முதலிய இருபத்து மூன்று தத்துவங்களும் தோன்றுதற்கு முதற் காரணமாக உள்ளது என்னும் காரணம்பற்றி வந்தபெயர். மலரின் கண் விளங்கித் தோன்றும் வாசனை அரும்பு நிலையில் விளங்காது அடங்கி நிற்றல்போல, இன்பத் துன்ப மயக்க வடிவாய் விளங்கி வெளிப்படும்



சத்துவம், இராசதம், தாமதம் என்னும் முக்குணங்களும் விளங்காது அடங்கி நின்ற நிலையே மூலப்பகுதி ஆகும். இக் காரணம் பற்றி மூலப்பகுதி அவ்வியத்தம் எனவும், குணம் வியத்தம் எனவும் கூறப்படும். வியத்தம் விளங்கும் நிலை; அவ்வியத்தம்-விளங்காது சத்திரூபமாய் அடங்கியுள்ள நிலை. இதனால் அவ்வியத்தம்(மூலப்பகுதி), சித்தம், குணம் (வியத்தம்) என்பவை ஒரே பொருளின் அவதர நிலை என்பது உணரப்படும். மனம்பற்றும் போதும், புத்தி துணியும் போதும், பின்விடயத்தில் அழுந்தும் போதும் பிராணவாயுவை இயக்கி யான் என நிற்றல் உண்மையின் பல்கால் எழுந்திருந்து என்றார். அவ்வெழுச்சியைச் செய்வது ஆங்காரம் என்க.

மேற்கூறிய இருபத்துநான்கும் நுகரப்படு பொருளாக அல்லது நுகர்ச்சியைப் பயப்பனவாக அமைதலின் போக்கிய காண்டம் (நுகரப்படும் தொகுதி) எனப்படும். இவையே ஆன்ம தத்துவம் எனவும்படும். நுகர்ச்சி என்றது அது அதுவாக அழுந்தி அறிவதே ஆகும் என்பது உணரத் தக்கது.

## வித்தியா தத்துவம்

மேல் கொடுக்கப்பட்ட விளக்கத்திலிருந்து மூலப்பகுதி ஆன்மாவால் அநுபவிக்கப்படுவதாயும், அவ்வான்மாவைத் தன் குணங்களாலும் காரியங்களாலும் தன் வண்ணமாம்படி மயக்குவதாயும் உள்ளது என்பது உணரப்படும். இது, தன் குணங்களாலும் செயலாலும் ஆடவனை மயக்கும் பெண்மகளைப் போன்றது; ஆன்மா ஆடவனைப் போன்றது. ஆண்மகனும் பெண்மகளை மணத்தற்குரிய பருவநிலை எய்திய பின் அன்றோ அவளை மணத்தல் கூடும்? அதுபோல, ஆன்மாவும் போகத்தில் (நுகர்ச்சியில்) நோக்கு உடையனான பின்பே மூலப்பிரகிருதியைப் புணர்தல் கூடும். மலத்தால் மறைப்புண்டு குருடனைப்போன்றுள்ள ஆன்மாவைப் போகத்தில் நோக்குடையவனாகச் செய்யும்

கருவிகள் உள. அக்கருவிகளே வித்தியா தத்துவங்கள் எனப்படும். ஆன்மா உணரும் தன்மைத்தாயினும் அதன் உணர்வு ஆணவ மலத்தால் தடுக்கப்பட்டுள்ளது. அம்மூல மலத்தின் தடுக்கும் ஆற்றலைச் சிறிது நீக்கி உயிர்க்கிழவனுக்கு முயற்சியைக் கிளரச் செய்வது கலை என்னும் தத்துவமாம். இது குருடனுக்குக் கோல் உதவுமாறு போல உயிர்க்கு உதவுவதாம். கலித்தல் என்பதன் பொருள் நீக்குதல், செலுத்துதல் என்னும் இரண்டுமாம். ஆணவமல ஆற்றலைச் சிறிது நீக்குதலாலும், அதனால் செயலாற்றல் விளங்கப்பெற்ற உயிரைப் புத்தியின்கண் தோன்றுவதாய இன்பத்துன்ப மோகங்களிற் செலுத்தி அழுந்தச் செய்தலாலும் கலை எனப்பட்டது. இங்ஙனம் செயல் விளங்கப் பெற்ற உயிர்க்கு அறிவாற்றலை விளக்குவது கலையினின்றும் தோன்றும் வித்தை என்னும் தத்துவமாம். இவ்வித்தை என்னும் கருவியே பொறிவாயிலாக வரும் நிருவிகற்பமாகிய புலனுணர்வையும், மனம், ஆங்காரம், புத்தி, சித்தம் என்பவற்றின் தொழிற்பாடாகிய சங்கற்பவிகற்பம், அபிமானம், துணிவு, நினைவு என்பவற்றின் உணர்வையும், தன்வேதனை உணர்வையும் உயிர் உணர்தற்கு நேர்வாயிலாக உள்ளது. இனி, வித்தையினின்றும் தோன்றும் அராகம் உயிர்க்குப் போகத்தில் விழைவை உண்டுபண்ணும். இவை மூன்றும் (கலை, வித்தை, அராகம்) உயிரின் தொழில் அறிவு விழைவு என்னும் மூவகை ஆற்றல்களை விளங்கச் செய்யும் அக அந்தக்கரணங்களாம். வித்தை-அறிவு, அராகம்-விருப்பு.

இனி இவற்றால் போகத்தை அறிந்து நுகரும்போது போகத்தைக் காலவரையறையுட்படுத்துவது காலம் என்னும் தத்துவம்; போகத்தை வினைக்கீடாக 'இது ஆகும், இது அன்று' என நியமித்து நடத்துவது நியதி என்னும் தத்துவமாம். இவ்வாறு காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஐந்தும் உயிர்க்குச் சட்டைபோன்று இருந்து அதனை நுகர்ச்சிக்கண் நோக்குடையதாகச் செய்



தலின், பஞ்சகஞ்சுகம் எனப்படும். இவ்வைந்திற்கும் மூல காரணமாய் உயிரின் அறிவிச்சை செயல்களைப் பொதுவாக முதற்கண் விளக்கி, மயக்கத்தையும் தருவது மாயை என்னும் தத்துவமாம். ஆன்மா பஞ்சகஞ்சுகியாய் நின்று போகத்தில் நோக்குடையதாய் இருக்கும் நிலையில் புருடன் எனப்படும். இங்ஙனம், மாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன் என்னும் ஏழும் வித்தியா தத்துவம் எனவும் போசயித்ரு காண்டம் எனவும் கூறப்படும். போசயித்ரு-நுகர்வோன். இத்தத்துவங்கள் பின்வரும் பாட்டுக்களால் உணர்த்தப்படுகின்றன:

## வித்தியா தத்துவம்

**காலம் நியதி கருதும் கலைவித்தை**
**ஏலஅரா கம்புருட னேமாயை—மாலறவேழ்**
**சொன்னேம் அடைவாகச் சொன்னஇவை தம்முண்மை**
**உன்னி உரைக்கும்நாம் உற்று. (18)**

**எல்லை பலம்புதுமை எப்போதும் நிச்சயித்தல்**
**அல்லல் தருங்கிரியை ஆன்மாவுக்(கு)—ஒல்லை**
**அறிவாசை ஐம்புலனும் ஆரவருங் காலம்**
**குறியா மயக்கென்று கொள். (19)**

பொ-ரை: காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்னும் ஏழும் வித்தியா தத்துவங்களாம். இவற்றின் இயல்பை உன்பொருட்டு அறிவான் அறிந்து நினைந்து உரைப்போம்: கேள்.

நுகர்ச்சியின் முடிவாகிய எல்லையும், விளைவும், இனி வரும் என்னும் புதுமையும் ஆய உணர்வினைக் காலம் என்னும் தத்துவம் முறையே இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் எனப் பகுப்புற்று நின்று உயிர்க்குப் பயந்து நிற்கும். நியதி அந்நுகர்ச்சியை உயிரின் வினைக்கீடாக 'இஃது உரியது. இஃது உரித்தன்று' என வரைந்து நியமிக்

கும். கலை உயிரின் கிரியா சத்தியையும், வித்தை ஞான சத்தியையும், அராகம் இச்சா சத்தியையும் விளக்கும். உயிர் மேற்கூறிய ஐந்தனோடும் கூடி, அவற்றோடு உடனாய் நின்று ஐம்புலன்கள் தரும்பயனை நுகரவரும் அவதரமே புருடன் எனப்படும் தத்துவமாம்; மாயை என்பது அறி விச்சை செயல்கள் பிரிந்து தோன்றுதலின்றிப் பொதுவாக விளங்கி ஒன்றையும் குறியாத மயங்கு நிலையை உயிர்க்கு எய்துவிப்பதாய் உள்ளது.

காலம் முதலியவற்றின் தொழிற்பாட்டை எல்லைபலம் புதுமை முதலிய என்றுகொள் எனமுடிக்க. அல்லல் என் பதன்பின் நீக்கி என ஒரு சொல் வருவிக்க. மலத்தின் சக்தியை நீக்கி என்றபடி.

### சுத்த (சிவ) தத்துவம்

வித்தியா தத்துவங்கள் ஏழும் விளம்பினோம்;
சுத்தமாம் தத்துவங்கள் சொல்லக்கேள் — நித்தமாம்
சுத்தவித்தை ஈசுரம்பின் சொல்லும் சதாசிவம்நற்
சத்திசிவம் காண்அவைகள் தாம். (20)

பொ-ரை: வித்தியா தத்துவங்கள் ஏழனையும் விளக்கினோம். இனி, சுத்த தத்துவங்களின் இயல்பைக் கூறுகிறோம் கேள்: அவைதாம் சுத்தவித்தை, ஈசுரம், சதாசிவம், சத்தி, சிவம் என்னும் ஐந்தும் ஆம். இவை கால தத்துவத்திற்கு மேற்பட்டவை ஆதலின், நித்தமாக உள்ளவையாம். இவற்றுக்கு முற்பிற்பாடு உயிர்க்கு உபகரிக்கும் வகையில் தொழிற்படுமுறை பற்றியே யன்றித் தோற்ற, ஒடுக்கம் பற்றி அன்றெனை அறிந்துகொள்.

சுத்தவித்தை ஞானமிகும் தொன்மையாம் ஈசுரந்தான்
அத்தன் தொழிலதிகம் ஆக்கியிடும் — ஒத்தல்இவை
சாதாக் கியம்என்றும் சத்தி சிவம்கிரியை
ஆதார ஞானஉரு ஆம். (21)



பொ-ரை: முதல்வன் திருவருள் உயிர்களுக்கு உபகரிக்கும்போது சுத்தமாயையை நிலைக்களமாகக் கொண்டு உபகரிக்கும். அவ்வாறு உபகரிக்கும்போது, திருவருள் இச்சை, ஞானம், கிரியை என மூவகைப்பட விளங்கித் தொழிற்படும். அவற்றுள் இச்சை யாண்டும் ஒரு படித்தாக நிகழும்; ஏனை இரண்டும் தனித்தும், ஒத்துக் கூடியும்' ஏற்றக் குறைவாகக் கூடியும் தொழிற்படும். இவ்வேறு பாட்டிற்கு ஒப்பச் சுத்தமாயையில் உண்டாகும் விருத்திகள் ஐந்து வகைப்படும். இவ்வைந்துமே மேற்கூறிய சுத்த தத்துவங்களாம். [அவற்றுள் ஞானம்மிகக் கிரியை குறைய நிகழும் அவதரத்துக்கு ஆதாரமாய் உள்ள உரு சுத்தவித்தை எனப்படும். தொழில் மேம்பட்டு நிகழ ஞானம் அடங்கி நிகழும் அவதரத்துக்கு ஆதார உருவாவது ஈசுவரம் எனப்படும்; இரண்டும் ஒத்து நிகழும் அவதரத்துக்கு ஆதார உருவாவது சாதாக்கியம் அல்லது சதாசிவம் எனப்படும்; கிரியைக்கு ஆதார உரு சக்தி. ஞானத்துக்கு ஆதார உருவாவது சிவம் ஆம்.]

வி-ரை: வித்தியா தத்துவங்களுள் எண்ணப்படும் வித்தையின் இது வேறு என்றறிவித்ததற்குச் சுத்தவித்தை எனப்பட்டது. கிரியை ஆதார உருவாகிய சத்தி விந்து எனவும் ஞான ஆதார உருவாகிய சிவம் நாதம் எனவும் வழங்கப்படும். இங்குக் கூறிய ஐந்தும் முதல்வன் ஏனை முப்பத்தொரு தத்துவங்களையும் தோற்றுவித்துத் தொழிற்படுத்துதற்கு ஆதாரமாய் மலகன்மங்கள் விரவாது இருத்தலின் சுத்த தத்துவம் எனப்படும்: அநந்தர் முதலாயினோரான் அன்றிச் சிவபிரானுற்றொழிற்படுதலின் சிவதத்துவம் எனவும் வழங்கும்.

ஆன்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவதத்துவம் மூவகையினையும் ஓர் உவமையின் வைத்து உணரலாம். நாம் ஒரு பொருளை நன்றாகஅமைத்து நுகர்கின்றோம் எனக் கருதுவோம். இங்கு முதற்கண் இரண்டு பிரிவு உணரப் படும்; ஒன்று நுகரப்படும் பொருள், மற்றொன்று நுகர்

வதற்குக் கருவியாக உள்ள உடம்பு. இவற்றுள் நுகரப்படும் பொருள் போன்றவை சத்துவம், இராசதம் தாமதம் என்னும் முக்குணங்கள்; இக்குணங்கள் புத்தி தத்துவத்தின்கண் அவ்வக்காட்சி விசேடம் பற்றிப் பரிணமித்துத் தோன்றுவன என்பது முன்னரே கூறப்பட்டது. ஆகவே, புத்தி தத்துவம் கொள்கலம் போன்றதாகின்றது. இக்குணங்கள் மூலப்பகுதியின் விருத்தியென்பது முன் கூறப்பட்டது. இவ்வாறாகலின், ஆன்மாவிற்குப் போகமாவது மூலப்பகுதியின்கண் உள்ளனவாய முக்குணங்கள் ஆன்மாவின் மாட்டு மேற்பட்டு விளங்கும் விளக்கம் என்பதும், ஆன்மா அக்குணங்களில் அழுந்தி அதுவதுவாகத் தன்வேதனைப்படுதலே போக அநுபவம் என்பதும் விளங்கும். இக்காரணம் பற்றியே மூலப்பகுதியும் அதன்கண் முக்குணங்களும் மாறி மாறித் தோன்றுவதற்கு ஏதுவாக உலகப் பொருள்களின் அலைவுகளை மூலப்பகுதியின் மாட்டுக் கொண்டு வருதற்குத் துணைபுரியும். அதன்கீழ் உள்ள இருபத்துமூன்று தத்துவங்களும் போக்கிய காண்டம் எனப்பட்டன.

இனி, நுகர்ச்சிப் பொருளை நுகர்வதற்கு நம்மோடு உள்ள உடம்பு போன்றவையே மாயை முதல் புருடன் வரை எண்ணப்பட்ட வித்தியா தத்துவங்கள். இவற்றுள் வித்தை, கலை என்பவை அறிவுப்பொறி தொழிற்பொறி போல அமைந்து, உயிர் போகத்தை அறிந்து அழுந்துதற்குத் துணை புரிவன ஆம். இவ்வாறாகலின் இவை போசயித்துரு காண்டம் எனப்படும் என்பதும் முன்னரே கூறப்பட்டது.

இனி, நம் உடம்பு தசை அமைப்பு, நரம்பு அமைப்பு என இரு கூறாய் உள்ளமையைச் சிந்திதல் வேண்டும். தசைகள் இயங்குவன; நரம்புகள் இயக்குவன. நம் அறிவு நரம்பின் மூலங்களைச் சிறப்பாகப் பற்றி அவற்றால் தசைகளைச் சுருங்கவும், விரியவும் செய்யும். இவ்வாறு மேற்கூறிய வித்தியா தத்துவங்கள் தசைகள் போன்று உயிர்க்கு



உடம்பாய் அமைய, அவ்வுடம்பை இயக்கும் நரம்புகளின் அமைப்பைப் போன்றவையே சிவதத்துவங்களும் நிவிர்த்தி முதலிய பஞ்சகலைகளும் ஆகும். இவை சுத்த மாயையின் காரியம்; ஏனைய முப்பத்தொரு கருவியும் அசுத்த மாயையின் காரியமாகும். சிவதத்துவங்கள் நரம்பின் மையங்கள் போன்றிருந்து முதல்வன் நேரே அதிட்டித்து ஏனைய தத்துவங்களைத் தொழிற்படுத்துதற்குத் துணையாக நிற்றலின், இவை பிரேரக காண்டம் எனப்படும். பிரேரகம்—செலுத்துதல். அதிட்டித்தல் - இடமாகக் கொள்ளுதல். எனவே, பிரகிருதி முடிவாக உள்ள ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் உணவு போலவும், வித்தியா தத்துவம் ஏழும் தசையும் பொறியுமாயமைந்த உடம்பு போலவும், சிவதத்துவங்கள் தலையில் உள்ள நரம்புகளின் மையங்கள் போலவும், நிவிர்த்தி முதலிய ஐங்கலைகள் தலையினின்றும் இறங்கி எல்லா உறுப்புக்களையும் இணைத்து நிற்கும் நாடிகள் அல்லது நரம்புகள் போலவும் அமைந்துள்ளன என்று உணர்ந்துகொள்க.

சிவதத்துவங்கள் ஐந்தனுள் சிவம் என்னும் தத்துவம் மாயையினையும் சத்திதத்துவம் கால நியதியோடு கூடிய கலையினையும், சாதாக்கியம் புருடனையும், ஈசுவரம் அராகத்தினையும், சுத்தவித்தை வித்தையினையும் செலுத்தி ஆன்மாவைப் போகத்தில் நோக்குடையதாகச் செய்யும். அந்நிலையில் போகத்தை நுகர்வோனும் தன்மை (போக்கிருத்துவம்) எய்திப் புருடன் என நிற்கும் ஆன்மா மூலப்பகுதியாகிய மனையாளின் குணத்தை அநுபவிக்கும். சுத்த மாயை விந்து எனவும், மூலப்பிரகிருதி மான் எனவும் வழங்கும்.

இனிப் போக நுகர்ச்சிக்கண் மாயை சித்தம் எனப்படும் குண தத்துவத்தையும், காலநியதியோடு கூடிய கலை அகங்காரத்தையும், வித்தை புத்தியினையும், அராகம் மனத்தையும் உயிர் அதிட்டித்தற்கு வாயிலாக அமையும்.

## ஆணவமும் மாறாவினையும்

ஆறாறு தத்துவமும் சொன்னோம் அடைவாக
மாறா மலமிரண்டும் வாசொல்லக் — கூறில்
அறியாமை ஆணவம்நீ யானசுக துக்கம்
குறியா வினையென்று கொள். (22)

பொ - ரை: இதுகாறும் முப்பத்தாறு தத்துவங்களின் இயல்பையும் முறைப்பட அறிவித்தோம்; இனி, உயிரை விட்டு நீங்காமல் வரும் ஆணவம் கன்மம் என்னும் இரு மலங்களின் இயல்பையும் உரைப்போம்; மனம் பொருந்திக் கேள். எடுத்துச் சொல்லுமிடத்து, நீ அறியாமை வயப் பட்டும் இன்பத் துன்ப வேதனைப்பட்டும் வருகின்றாய் அல்லவா? அறியாமையே யான், சுகதுக்கமே யான் என அவையேயாய் உன்னை வேறு பிரித்து அறியாது அல்லவோ நிற்கின்றாய்! அறியாமையைக் குறியாக உடையது ஆணவம் எனவும், இன்பத் துன்பங்களைக் குறியாக உடையவை இருவினை எனவும் உள்ளத்திற்கொள்.

இதனால், உயிரின் அறிவை மறைத்து அறியாமையை விளைத்து நிற்பது ஆணவமலம் என்பதும், இன்பத் துன்ப அநுபவங்களை விளைத்து நிற்பது இருவினை யெனப்படும் கன்ம மலம் என்பதும் உணர்த்தப்பட்டன.

## உணர்த்திய உளங்கொண்டு மேலும் வினாதல்

ஆறாறு தத்துவமும் ஆணவமும் வல்வினையும்
மாறா அருளால் வகுத்துரைத்தீர் — வேறாகா
என்னை யெனக்கறியக் காட்டீர் இவைகண்டேன்
உன்னரிய தேசிகரே உற்று. (23)

பொ - ரை: நினைத்தற்கரிய பெருநிலை உடைய குரு முதல்வரே, உமக்கு என்றும் இயல்பாக உள்ள பெருங் கருணையால் மாயையின் காரியங்களாகிய முப்பத்தாறு



தத்துவங்களினியல்பையும் வகை செய்து உரைத்தருளினீர்; உமது கடைக்கண் நோக்கைப் பொருந்தி இவற்றின் உண்மையை அநுபவமாகக் கண்டுகொண்டேன்; என்னை இதுகாறுங்கூறிய தத்துவங்களின் செயல், அறியாமை, இன்பத்துன்பம் என்னும் இவற்றுக்கு வேறாக அறியகில் லேன். ஆகலின், 'நான் ஆர்?' என யான் உணரும்படி, என் உருவை எனக்குக் காட்டி யுபகரித்தருள்க. தத்துவம், ஆணவம், வினை இவற்றின் வேறாகாத என்னை என்க.

## நான் (ஆன்ம உரு)

நன்றா உரைக்கக்கேள் நல்லசித்தின் முன்அசித்திங்(கு)
ஒன்றாது சித்தசித்தை ஓராது — நின்றிவற்றை
அன்றோ பகுத்தறிவ(து) ஆன்மாவே என்றுமறை
குன்றாமல் ஓதும் குறித்து. (24)

பொ - ரை: யாம் உரைப்பதை நன்றாகக் கேள். எவ் வகையாலும் மாறுதல் இன்றி நிலை பெறும் செம்பொரு ளாகிய சிவசத்தின் முன் உடல், கருவி, போகம், உலகு என்னும் அறிவில் பொருள்கள் முனைந்து தோன்ற மாட்டா, ஞாயிற்றொளியின்முன் விளக்கொளிபோல. ஆதலினால், அச்சித்தாகிய சிவம் அவ்வறிவில் பொருள்களை இது, இது எனச்சுட்டி ஆராய்ந்து அறியாது; (ஆயின், யாம் இதுகாறும் அவ்வறிவில் பொருள்களாகிய தத்துவங்களை வகுத்துரைப்பச் சுட்டி அறிந்து வந்தாய் அல்லவா? ஆகலின் நீ அத்தகைய சிவம் ஆகாய்); இவ்வுண்மை யைக் குறித்து, மறை, தத்துவங்களோடு கூடி அவையே யாய் நின்று, பின் அநுபவமுள்ள தேசிகன் உணர்த்தும் போது, அவற்றை இது, இது எனப் பகுத்து அறிவது ஆன்மாவே ஆம்; பரமான்மா அன்று எனத் தெளிவு குறை தலின்றி எடுத்தோதும்: (இவ்வடிப்படை உண்மையை இங்ஙனம், சுருதி, குருவாக்கு, சுவாநுபவம் என்னும் மூன் றானும் தெளிக.)

**வி-ரை:** 'சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனை யாண்ட அத்தன்' எனவும், 'நான் பிரமம் எனவும்' இரு மறைகளும் முத்திநிலை பற்றிக் கூறும் உரைகளை உள்ள வாறு உணர மாட்டாதார்' அறிவாவது ஒன்றே, அதுவே பரம்பொருள்' என வகுத்துரைப்பர்; அது மறைகளின் உண்மை முடிபன்று என்பது இதனால் உணர்த்தப்பட்டது.

சித்து—அறிவுடைப் பொருள்; அசித்து-அறிவில்லாத சடப்பொருள். தத்துவங்களோடு கூடி அறிந்து வரும் ஆன்மசித்தின் வேறாவதே சிவம் என்றறிவித்தற்கு நல்ல சித்து என அடையொடு புணர்த்திக் கூறப்பட்டது. நல்ல சித்து—என்பது சத்துச் சித்து (சச்சித்) என்னும் பொருளது.

இப்பாட்டின் உரையில் கூட்டி உரைத்தவையெல்லாம் குறிப்பெச்சத்தாற் பெறப்பட்டவை.

இங்கு ஆசிரியரால் கருதப்படும் மறை ''ஒரே மரத்தில் இரண்டு அழகிய பறவைகள் கூடி வாழ்வ ஆயின; அவற் றுள் ஒன்று அரச மரத்தின் இனிய பழத்தை உண்கிறது; மற்றையது உண்ணாது பார்த்துக்கொண்டுளது''—இருக்கு வேதம், முதல் மண்டிலம் 164-ஆம் சூக்தம் 20-ஆம் மந்திரம்.

இதனை மூலமாகக் கொண்டெழுந்த ''ஒரே மரத்தில் புருடன் தன்வயம் இன்மையால் மயக்கமுற்றுத் துன்பத்தில் மூழ்கிக் கிடக்கின்றான்; என்று அவன் இன்பத்தை யுடைய ஈசனை அறிந்து, அவன்றன் பெருங் குணத்தை அடைகின் றானோ, அன்று துன்பத்தின் நீங்கினோன் ஆகின்றான்''—முண்டக உபநிடதம் 3-1-1 என்பவை ஆகும்.

**द्वासुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते ।**
**तयोरन्यः पिप्पलं स्वाद्वत्यनश्नन् अन्योऽभिचाकशीति ॥**
**समाने वृक्षे पुरुषोनिमग्नोऽनीशया शोचति मुह्यमानः ।**
**जुष्टं यदा पश्यत्यन्यमीशं अस्य महिमानमिति वीतशोकः ॥**



இம்மறை மொழிகளில் மரம் என்றது மாயையின் காரியமாகிய தத்துவங்களாலாகிய உடம்பு; அதன்கண் உள்ள இரு பறவைகளுள் தன்வயமின்றி மயக்கமுற்றுத் துன்பத்தில் மூழ்கிக் கிடக்கும் பறவை உயிர் எனப்படும் சீவான்மா; அது உண்ணும் கனி இருவினைப் பயனாகிய இன்பத் துன்ப மயக்கங்கள்; மற்றொரு பறவை சீவ சாட்சி யாய் உடன் உள்ள பரமான்மா. இதனால், இறை, உயிர், தளை என்பவை மூன்று வேறு பொருள்கள் என்பதும், உயிர் தளையின் நீங்கி இறையை அறிந்து அழுந்துவதே முத்தியென்பதும் விளங்கும்.

**தத்துவங்கள் ஆறாறும் தம்மைத்தாம் என்றறியா**
**எத்தன்மை என்னில் இயம்பக்கேள் — சுத்தமாம்**
**ஆறு சுவையும் அறியாவே தம்மைத்தாம்**
**கூறில் அவையிவைபோற் கொள். (25)**

**பொ-ரை:** **இனி,** தத்துவங்கள் தத்தமக்குக் கீழ் உள்ளவற்றை அறிதலின், அவற்றையே ஆன்மா எனக் கொள்ளலாமோ எனின், கொள்ளலாகாது; அதற்குக் காரணம் கூறுகின்றோம்:-முப்பத்தாறு தத்துவங்களும் தத் தமக்குக் கீழ் உள்ளவற்றை நோக்க அறிவுடையவை போற் றோன்றினும், அவை தம்மை நோக்கி ''யான் இது செய் வல்'' என அறியா. இங்ஙனம் தன்னோக்கு உணர்வு (self-consciousness) உடைமையும் இன்மையுமே ஆன்மா வுக்கும் ஆன்மா அல்லனவற்றுக்கும் வேறுபாடறிய நிற்கும் குறியாவது; இனி, தத்துவங்கள் தம்மை நோக்கித் தாம் என்றறியாமை எத்தன்மை போலும் எனின், கூறு கின்றோம். கேள். நீ நுகரும் உணவின் சுவைகளைக் கைப்பு, கார்ப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, புளிப்பு, இனிப்பு, என ஆறாக அறிகின்றாய் அல்லவா? அச்சுவைகள் தம்மையே நோக்கி, ''யான் கைப்பு, யான் கார்ப்பு'' என் றாற்போலத் தம்மைத்தாம் அறியா அல்லவா? தத்துவங் களை இச் சுவைபோற் கொள்.

ஆறு சுவையும் அருந்தி அவைதம்மை
வேறொருவன் கூறியிடும் மேன்மைபோல்—ஆறாறும்
ஒன்றொன்றா நாடியுணர்ந் தோதில்அதில் உற்றறிவாய்
நின்றபொருள் தானேகாண் நீ. (26)

பொ-ரை: *மற்றென்னையோ என்னை அறியுமாறு? எனின் ஆறு சுவையினையும் அருந்தி, அவற்றை ''இது கைப்பு, இஃது இனிப்பு'' என்றாற் போலத் தனித் தனி அறிவதோடு, ''நான் கைப்பைச் சுவைத்தேன் இனிப்பைச் சுவைத்தேன்'' எனத் தன்னை நோக்கி அறிந்து பிறர்க்குக் கூறும் மேம்பாடுடைய ஒருவன் போல, முப்பத்தாறு தத்துவங்களையும் ஒவ்வொன்றாக ஆய்ந்தறிந்து அங்ஙனம் உணர்ந்து வருகையான், ''இவை கண்டேன்''; எனத் தன்னைக்கு உணர்வாய் யாங்கணும் நின்ற பொருள்தான் நீ எனக் கண்டுகொள்.*

### நீ (போதப் பொருளாம் மெய்)

குன்றா அருளாலே கூறினீர் என்வடிவு
பொன்றாத நும்முருவம் போதியீர் — நின்றருக்கன்
கண்ணுக்குக் காட்டுமாப் போலே உனதறிவின்
நண்ணிஅறி வித்திடுவோம் நாம். (27)

பொ-ரை: *'கெடாத திருவருளால் என் இயல்பை யான் அறியும்படி விளக்கி யருளினீர்; இனி, அழிதல் இல்லாத நும்மியல்பை (உணர்த்தும் உணர்வாகிய திருவருளினியல்பை) எனக்குத் துணிவு பிறக்கும்படி உணர்த்தி யருள்க!' என மாணாக்கர் கூற, ஆசிரியர் உணர்த்துகின்றார். — ஞாயிறு கண்ணுக்கு வேறாய் நின்று, பொருள்களை அக்கண் அறியும்படி தன் ஒளியால் விளக்கிக் காட்டுதல்போல, உனக்கு வேறாய் நின்றே, உன் அறிவில் நமது சத்தியாற் பொருந்தி உன்னை அறியும்படி செய்து வருவோம்.*



*இஃது இறைவன் உயிர்க்கு வேறாய் நின்று உணர்த்துதலை உவமையின் வைத்து உணர்த்துகின்றது.*

அன்றியுங்கேள் ஆன்மாவால் ஆய்ந்தறியும் ஐம்பொறிகள்
இன்றி அறியா இவையென்ன — நின்றதுபோல்
ஓவாமல் உன்னை உணர்த்துவோம் உன்னறிவில்
மேவாமல் மேவிநா மே. (28)

பொ-ரை: *இன்னும் கேள். அறிவுப் பொறிகள் ஐந்தும் உயிரின் அறிவாற்றலால் விளக்கம் அடைந்து தத்தம் புலன்களை நுணுகி அறியும்; உயிரின் துணையின்றி அறியா என்று சொல்லும்படி இப்பொறிகளை உயிர் அதிட்டித்துப் பொறிகளேயாய் நின்றதுபோல், யாமும் உன்னறிவில் வேறு பிரிந்து காணப்படாமல் கரந்து மேவி ஒழிவின்றி உன்னை உணரும்படி செய்து வருவோம்.*

*இஃது இறைவன் உயிரேயாய் நின்று உணர்த்தி வருதலை உவமையின் வைத்து உணர்த்துகின்றது.*

அக்கரங்கட் கெல்லாம் அகரவுயிர் நின்றாற்போல்
மிக்க உயிர்க்குயிராய் மேவினோம் — எக்கண்ணும்
நில்லா விடத்துயிர்க்கு நில்லா தறிவென்று
நல்லா கமம்ஓதும் நாடு. (29)

பொ-ரை: *அகரவுயிர் எழுத்துக்களெல்லாவற்றிலும் கலந்து நின்று அவற்றின் இயக்கத்திற்குக் காரணமாக உள்ளது. அதுபோல யாமும் எண்ணிலாத எல்லா உயிர்களிடத்தும் உயிர்க்குயிராய் உடனாயிருந்து அவற்றைத் தொழிற்படுத்துவோம். முதல்வன் யாங்கணும் நிறைந்து நின்று அறிவித்தாலன்றி உயிர்க்கு அறிவு விளங்காது என்று நல்ல ஆகமங்கள் கூறும், அதனை ஆய்ந்தறிக. [எக்கண்ணும் - அறியப்படும் எல்லாப் பொருள்கள் மாட்டும், உயிர்கள் மாட்டும் எனக் கொள்க.]*

*இதனால் உடனாய் நின்று உணர்த்துதல் கூறப்பட்டது.*

### நாதனடம் (ஆநந்தப் பொருள்)

**நற்றவத்தோர் தாம்காண நாதாந்தத் தஞ்செழுத்தால்**
**உற்றுருவாய் நின்றுடல் உள்ளபடி — பெற்றிடநான்**
**விண்ணுர் பொழில்வெண்ணே மெய்கண்ட நாதனே**
**தண்ணுர் அருளாலே சாற்று. (30)**

பொ - ரை : நல்ல தவத்தைச் செய்தவர்கள் காணும் படி நாதத்தின் முடிவில் திருவைந்தெழுத்தால் திருவுருக் கொண்டு முதல்வன் செய்யும் திருநடத்தின் இயல்பை அடியேன் உள்ளபடி அறிந்து நன்மையுறுதற் பொருட்டு, வானே அளாவி எழும் சோலைகள் நிறைந்த திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியுள்ள மெய்கண்டநாதரே, குளிர்ந்த திருவருளாலே கூறியருள வேண்டும்.

நாதாந்தம்—நிலம் முதல் நாதமீருகிய பாசத்தின் நீங்கிய எல்லே.

### திருநடனஞ் செய் இடமும் கரணமும்

**எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே**
**நட்டம் புதல்வா நவில்க்கேள் — சிட்டன்**
**சிவாயநம என்னும் திருவெழுத்தஞ் சாலே**
**அவாயமற நின்றுடு வான். (31)**

பொ - ரை : மாணுக்கனே, உயிராகிய ஆதாரத்தில் முதல்வன் செய்யும் திருநடனத்தின் இயல்பைக் கூறுகின்றேம்; கேள். மேலான சிவபிரான் திருவைந்தெழுத்தையே திருமேனியாகக் கொண்டு உயிர்களின் துன்பத்திற்குக் காரணமாகிய பிறப்பு அறும்படி நின்று ஆடுவான் என அறிக.

எட்டும் இரண்டும் பத்து. அது தமிழில் ய எனக் குறிக்கப்படும். இதற்கும் ய என்னும் எழுத்திற்கும் மிகுந்த வேற்றுமையின்மையின், எழுத்தைக் குறித்து, அவ்வெழுத்தில் வைத்து நினேக்கப்படும் உயிரைக் குறிப்பதாயிற்று.



### திருவைந்தெழுத்தால் உருக்கொள்ளுதல்

**ஆடும் படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே**
**நாடுந் திருவடியி லேநகரம் — கூடும்**
**மகரம் உதரம் வளர்தோள் சிகரம்**
**பகருமுகம் வாமுடியப் பார். (32)**

பொ - ரை: மாணுக்கனே, உயிர்களுக்கு இன்பம் செய்யும் அம்பலவாணன் கூத்தியற்றுமியல்பைக் கேள்: அன்பர்கள் நாடும் திருவடி ந காரமாயிருக்கும்; வயிறு ம காரமாகும்; வளரும் தோள்கள் சி காரமாகும்; முகம் வா ஆகும்; முடி ய ஆகும். இவ்வாறு அவர் தம் அங்கம் அமைதலேக்காண்.

**சேர்க்கும் துடிசிகரம் சிற்கனவா வீசுகரம்**
**ஆர்க்கும் யகரம் அபயகரம் — பார்க்கிலிறைக்கு**
**அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனுர்**
**தங்கும் மகரமது தான். (33)**

பொ - ரை : துடிசேர்க்கும் திருக்கை சிகாரம்; வீசுங்கை ஞானமயமான அருளேக்குறிக்கும் வா என்னும் உயிர்மெய்; அமையும் எனவும் அஞ்சல் எனவும் பொருள் தாரா நிற்கும் அபய அத்தம் ய காரம்; அங்கி ஏந்திய கை ந காரம்; முயலகனுரைக் கீழே அழுத்தும் அடி மகாரம் என அவர் தம் பிரத்தியங்கம் அமையும்.

**ஓங்கார மேநற் றிருவாசி உற்றதனில்**
**நீங்கா எழுத்தே நிறை சுடராம் — ஆங்காரம்**
**அற்றுர் அறிவரணி அம்பலத்தான் ஆடலிது**
**பெற்றுர் பிறப்பற்றுர் பின். (34)**

பொ - ரை : முதல்வனுக்கு உபாங்கமாக உள்ள திருவாசி ஓங்காரமாகும்; அத்திருவாசியில் அமைந்துள்ள சுடர்கள் ஓங்காரத்தின் நீங்காதனவாகிய மாத்ருகாக்கரங்கள் ஆகும்.

உற்று அதனினீங்கா எழுத்தே நிறைசுடராம் என்பதற்கு 'பொருந்தி அப்பிரணவத்தை விட்டு நீங்காத பஞ்சாக்கரமே உள்ளொளியாம்' என்பது பழைய உரை.

திருவம்பலத்தான் ஆடலின் இவ்வியல்பை யான் எனது என்னும் செருக்கற்றாரே அறிவர், இதனை அறிந்து வழிபடப் பெற்றோர் பின்பிறப்பை அறுப்பது துணிவு.

குறிப்பு: *32, 33, 34 ஆம் பாட்டுக்களின் உரை பரார்த்த பூசா விதியைத் தழுவி எழுதப்பட்டது.*

### ஊன நடம்

*(தூல, சூக்கும, அதிசூக்கும நடனங்கள்)*

**தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்**
**சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் — ஊற்றமா**
**ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம்முத்தி**
**நான்ற மலர்ப்பதத்தே நாடு. (35)**

பொ-ரை: துடியை இயக்கும் திருக்கையில் படைத்தற்றொழிலையும், அமைத்த திருக்கையில் காத்தற்றொழிலையும், அங்கி ஏந்திய திருக்கையில் அழித்தற்றொழிலையும், முயலகன்மீது உறுதியாக ஊன்றும் திருவடியில் மறைத்தற்றொழிலையும், எடுத்த திருவடியில் பாசத்தை நீக்கி ஞானத்தைக் கொடுப்பதாகிய (தீக்ஷா கிருத்தியமாகிய) அருளுதலையும் குறித்து அறிந்துகொள்.

### ஞான நடம்

**மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலம்**
**சாய அமுக்கிஅருள் தானெடுத்து — நேயத்தால்**
**ஆநந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்**
**தானெந்தை யார்பரதம் தான். (36)**

பொ-ரை: துடியை அசைத்தல் பக்குவம் எய்திய ஆன்மாவின் உணர்விலிருந்து மாயையை உதறி விலக்குவ



தாகும்; ஓம அங்கியை ஏந்தியுள்ள கை, அவ்வான்மாவின் தொல்வினைகளை முளையா வண்ணம் சுடுவதாயிக்கும்; ஊன்றுந் திருவடி ஆணவமலத்தைத் தன் ஆவாரக சத்தி (மறைக்கும் செயல்) அதோநியாமிகா சத்தி (கீழ் வீழ்க்கும் செயல்) ஆகிய இருவகை ஆற்றலும் கெட்டு நிற்கச் செய்வதாகும்; எடுத்த திருவடி சகல கேவல நிலைகளில் ஏறியும் இறங்கியும் சுழன்றுவந்த அவ்வுயிரை அவற்றில் மீளாதபடி துரிய அருணிலைக்கண் எடுத்து உய்ப்பதாயிருக்கும்; அவ்வெடுத்த திருவடியின் குஞ்சித்த (வளைத்த) நிலையும் அதற்கு ஒப்ப அப்பாதத்தைக் காட்டும் திருக்கையும் நில் என்னும் பொருள்பட அமைத்த திருக்கையும் துரியாதீதம் எனப்படும் ஆநந்த நிலையில் அழுத்தும் குறிப்புடையன ஆகும். எந்தையார் செய்யும் பரதத்தில் உள்ள பாவனை (குறிப்பு) இவையாம்.

### ஆநந்த நடனம்

**மோனந்த மாமுனிவர் மும்மலத்தை மோசித்துத்**
**தானந்த மானிடத்தே தங்கியிடும் — ஆநந்தம்**
**மொண்டருந்த நின்றாடல் காணுமருள் மூர்த்தியாக்**
**கொண்டதிரு அம்பலத்தான் கூத்து. (37)**

பொ-ரை: மோனமாகிய ஞானவரம்பில் நிற்கும் சிறந்த முனிவர்கள் மும்மல வாதனையையும் அறநீக்கி, யான் என்னும் செருக்கு அற்ற நிலையில் வெளிப்படும் சிவாநந்த அமுதத்தை மொண்டு கண்களால் அருந்துதற் பொருட்டு வெளியே புலப்பட நின்று ஆடுதலே திருவருளையே காணும் வடிவமாகக் கொண்ட திருவம்பலத்தான் கூத்தாம்.

வி-ரை: முனிவர்தம் உள்ளத்து விளங்கும் ஞானமே அம்பலமும், ஆண்டுப் பெருகி யெழும் ஆநந்தமே சிவமும் ஆம் எனவும், அங்ஙனம் உணர்வின் நேர்பெறவரு சிவபோகத்தை ஐம்பொறி அளவினும் எளிவரச் செய்வதே

திருத்தில்லைத் திருக்கூத்து எனவும் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். ''மோனந் தவாமுனிவர்'' எனவும் பாடம் இருத்தல்கூடும்.

### திருக்கூத்தைக் கண்டார் பெறும் பேறு

**பரையிடமா நின்றுமிகு பஞ்சாக் கரத்தால்**
**உரையுணர்வுக் கெட்டா ஒருவன் — வரைமகள் தான்**
**காணும் படியே கருணையுருக் கொண்டாடல்**
**பேணுமவர்க் குண்டோ பிறப்பு. (38)**

பொ-ரை: வாக்கு மனங்கழிய நின்ற, ஒருவன் என வேதாந்தத்தால் ஏத்தப்படும் முதல்வன், மந்திரங்கள் எல்லாவற்றுள்ளும் மிக்கதாகிய திருவைந்தெழுத்தால் கருணையே உருவமாகித் தனது திருவருளாகிய பராசத்தியையே தனக்கு ஆதாரமாகிய இடமாகக் கொண்டு, அவ்வருளின் பிழம்பாகிய உமையம்மை காணும்படி நின்று ஆடும் அற்புதக் கூத்தை மேற்கூறிய முறையில் உணர்ந்து விரும்புவோர்க்குப் பிறவியறும்.

வி-ரை: உருவும், பெயரும், தொழிலும் தனக்கென இல்லாத முதல்வன், நினைத்தற்கரிய தன்னியல்பினை ஆன்மாக்கள் உளங்கொண்டு வழிபட்டு உய்தற்பொருட்டுத் தன் கருணையினால் அவற்றை மேற்கொள்ளுகிறான். அவ்வாறு அவன் மேற்கொள்ளும் திருவுருவங்களுள் ஒன்றாகிய திருக்கூத்தியற்றும் கோலம் இறைவனது முழுமுதற்றன்மையினையும் பரிபூரண அநுக்கிரக நிலையினையும் நன்கு போதிப்பதாகும். அது தன்னைக் காணும் முத்தான்மாக்களை அந்நிலையே நின்மல துரியாதீத ஆநந்த நிலைக்கண் உய்த்து, மாறிலா மகிழ்ச்சியின் மலர வைப்பது.

நாதன் நடம் என்னும் இப்பகுதியில், கூத்தப்பிரான் திருவுருவம் பிரணவத்தோடு கூடிய திருவெழுத்தைந்தால் அமைந்த முறைமையும், திருக்கூத்துப் போதியா நிற்கும்



அருணிலை ஆநந்தநிலைகளும், அதனியல்பை உள்ளவாறு அறிந்து பேணி வழிபடுவார் எய்தும் பயனும் தொகுத்து உணர்த்தப்படுகின்றன.

(i) **திருவுரு:-** உயர்ஞான நூல்களுக்கெல்லாம் மூலமாகிய ஓங்காரமே திருவாசி; முதல்வனது அங்கப் பிரத்தியங்க சாங்கங்களெல்லாம் திருவைந்தெழுத்தாலானவை: ஆடும் இடமாகிய திருவம்பலம் திருவருள். திருக்கூத்தை உடனின்று கண்டு, அதன் பயனைக் குழவிகளாகிய உயிர்களுக்கு அவ்வவற்றின் பக்குவநிலைக்குத்தக அருத்தி நோய் நீக்கி வரும் அம்மை சிவகாமவல்லி திருவருளின் பிழம்பு.

இங்கு முதல்வன் திருவுரு ஐந்தெழுத்தால் அமைந்த முறைமையினைக் கூறும்போது, ஆசிரியர் அவ்வளவின் அமையாது, 'எட்டும் இரண்டும் உருவானலிங்கத்தே நட்டம்' என உயிரையும், 'கருணையுருக் கொண்டாடல்' எனத் திருவருளையும், முதல்வனது திருவுரு எனக் குறிப்பித்தல் கருதத் தக்கது. இவை முரணுன கருத்துக்களோ எனின், அல்ல. ஞாயிற்றை நம் கண்ணுக்குக் காட்டுவது ஞாயிற்றின் ஒளியேயன்றிப் பிறிது அன்று. அவ்வொளி ஞாயிற்றின் சொரூபமாகவும் குணமாகவும் அமைதலை யாம் காண்கின்றோம். அவ்வாறு முதற்பொருளின் சொரூபமாகவும் குணமாகவும் உள்ள திருவருளே அதனை உயிர்களின் அறிவுக்குக் காட்டவல்லது. ஞாயிற்றுக்கு ஒளியின்றேல் ஞாயிற்றை யாம் காணுதல் கூடாது; அதுபோல முதற்பொருள் திருவருளையுடையதன்றெனின், உயிர்கள் அதனை அறிந்து பயன் எய்துதல் இல்லையாம். ஆகலின், முதல்வனுக்கு அவன்றன் திருவருளே அதிசூக்கும வடிவாம் என்பது உணரத்தக்கது, இனி, உயிர் முதல்வனது அருட்சத்தியால் வியாபிக்கப்பட்டுச் செலுத்தப்படுவது ஆதலின், அது முதல்வனது சூக்கும வடிவாம்; ஓங்காரத்தோடு கூடிய திருவைந்தெழுத்து முதல்வனது தூலவடிவாம் என இவ்வாறு விவேகித்து உணர்ந்துகொள்ளுதல் வேண்டும்.

இன்னும் திருவைந்தெழுத்தை முதல்வனுக்குத் திருவுருவாகவும், உறுப்புக்களாகவும், கருவிகளாகவும் கூறும் போது அவற்றை முதல்வனுக்குப் பஞ்சகிருத்திய உபயோகிகள் என ஆகமங்களிற் கூறப்படும் ஐஞ்சத்திகளைக் குறிக்கும் வாசக மறைகள் என உணர்தல் வேண்டும். ஐஞ்சத்திகளாவன யாவையோ எனின், ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி என்பவையாம். இவை முறையே அருளல், மறைத்தல், அழித்தல், காத்தல், படைத்தல் என்னும் ஐந்தொழில்களைச் சங்கற்பிக்கும் முதல்வனது சத்தி பேதமாம்.

திருவைந்தெழுத்துக்களுள் நகாரம் மூர்த்தியையும் மகாரம் வாமையினையும்; சிகாரம் ஆர்த்தியையும், வா என்னும் உயிர்மெய்ந்நெடில் பூரணியையும், யகாரம் ஈசானியையும் குறிக்கும். இனி, ஈசானம் முதலாக எண்ணப்படும் ஐம்பெருமனுக்களும் (பஞ்சப்பிரம மந்திரங்கள்) இவ்வைஞ்சத்திகளையே குறித்தலின் திருவெழுத்தைந்தும் ஐம்பெருமனுக்களுக்கு மூலமாதல் உணரப்படும். பிரணவமும், திருவைந்தெழுத்தும், ஐம்பெருமனுக்களும் வேதத்தும் ஆகமத்தும் ஒப்ப ஓதப்படுபவை என்பது அறிஞர்களால் நினைக்கத் தக்கது.

''பிரணவ முதலாய்ச் சிவாயவென் பதுபின்
பிணைந்துறக் கிளக்கும்ஆ றெழுத்தும்
விரவுமந் நூலின் எவ்வகை மனுக்கு
மேலதாம், அவைதரு பொருள்கள்
பரனொடு பஞ்ச சத்திகள்; இரண்டு
பயனுமாம் பயின்றவர்க்(கு); ஆதி
மருவிய பதத்தின் வித்தின் ஆல் என்ன
மறைமுதல் அனைத்தும்தோன் றினவால்''

— தணிகைப் புராணம்

என்பது அறிக.



நம்மனோர் செய்யும் செயல்களுக்கு மாயை காரிய தனு கரணபுவன போகங்கள் (உடல், கருவி, நிலம், நுகர்ச்சிப் பொருள்) உடனின்று உதவுமாறு போல, முதல்வன் செய்யும் செயல்களுக்கு அவனது திருவருளே அவை யெல்லாமாயிருந்து உதவும் என அறிக. முதல்வன் தனுவை அங்கம் என்றும், உறுப்புக்களைப் பிரத்தியங்கம் என்றும், கரணங்களைச் சாங்கம் என்றும், புவன போகமாவனவற்றை உபாங்கம் என்றும் வழங்குதல் சைவாகம மரபு.

(ii) திருக்கூத்து:

**ஊன நடனம்:** பொதுவாக உலகின் மேல் வைத்துப் படைத்தல், காத்தல், அழித்தல் எனவும், உயிர்கள் மேல் வைத்து மறைத்தல், அருளல் எனவும் நாம் உணர்ந்து வரும் தொழில்கள் முதல்வன் இயற்றும் தூல ஐந்தொழில் எனப்படும்.

இனி, உலகெலாம் ஒடுங்கிய பின்னும், மீள உலகம் தோன்றுதற்கு ஏதுவாக முதல்வன் இயற்றும் செயல்கள் உள்ளன. எடுத்துக் காட்டாக, ஒரு கல்விக் கூடத்தை எண்ணுவோம். தலைமை ஆசிரியர் பாடசாலையை அலுவல் நாட்களிலே மட்டுமே நடத்துகிறார் எனக் கருதுதல் தவறு அன்றோ! பாடசாலையை மூடியபின் ஏனை ஆசிரியர்களும் மாணாக்கர்களும் ஓழிவு எடுத்துக் கொண்டாலும், தலைமை ஆசிரியர் மட்டும் அடுத்த ஆண்டுக்கு வேண்டும் திட்டங்களை வகுப்பார்; அடுத்த ஆண்டில் செயற்படும் வகுப்புப் பிரிவுகளின் எண்ணிக்கை, வேண்டிய ஆசிரியர்களின் எண்ணிக்கை, உபகரணங்கள், எவ்வெம் மாணவர் எவ்வெப் படிவத்திலிருந்து பயிலுதற்கு உரியர் என்பது, பாடத் திட்டங்கள் என்றாற் போல்வனவற்றை ஆராய்ந்து முடிப்பார். இதுபோல் உலகெலாம் ஒடுங்கிய ஊழிக் காலத்தும் முதல்வன் சங்கற்பிக்கும் சங்கற்பங்கள் உள்ளன. மேலும் நாம் அன்றாடம் உறங்கும்போது வெறும் ஓழிவு கொள்ளுகிறோம் என்று மட்டும் எண்ணுதல் தவறு. நம் உடம்பின்

வளர்ச்சி, நோய் நீக்கம், விழித்திருந்த நிலையில் தீர்வு காண முடியாது சிக்கலான வினாக்கள் சிக்கலும் குழப்பமும் தீர்ந்து தெளிவு பெறுதல் முதலிய நிகழ்ச்சிகள் உறக்க நிலையில் உளவாகின்றன. இவையெல்லாம்; புலப்படத் தோன்றாதனவாயினும், முதல்வன் அந்நிலையில் சூக்குமமாகச் செய்யும் உபகாரங்கள் ஆம். இங்ஙனம் உயிர்களின் ஒடுக்கநிலையில் முதல்வன் செய்யும் ஐந்தொழில்கள் சூக்கும ஐந்தொழில் எனப்படும்; ''நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே'' என மணிவாசகப் பெருமான் அருளிச் செய்தது இச்சூக்கும ஐந்தொழில் குறித்தே ஆம்.

இனி, விழிப்பு நிலையினும், நாம் ஆன்ம வித்தியா தத்துவங்களோடு கூடிப் பொருள்களை முன்னர் வாயிற் காட்சியால் நிருவிகற்பமாயறிந்தும், பின் மானதக் காட்சியால் சவிகற்பமாயறிந்தும், அதன்பின் அதுவதுவாய் அழுந்தித் தன் வேதனையுற்றும் வரும்போதெல்லாம் முதல்வன் சுத்த தத்துவங்களைச் செலுத்தியும் உயிரை உடனாய் நின்று செலுத்தியும் உபகரிப்பன். இவ்வுபகாரம் அதி சூக்கும ஐந்தொழில் எனப்படும்.

இம்மூன்றும் உயிர்கள் வினைகளை ஈட்டுதற்கும், ஈட்டிய வினைப்பயனை நுகர்தற்கும் ஏதுவாக உயிர்களைப் பந்தம் உறுத்துவனவாகவே நிகழ்தலின், இவை ஊன நடனம் என மூன்றாய் அடங்கும். இம்மூவகை ஊன நடனம் முதல்வனாற் செய்யப்படும் என்பது 'தோற்றம் துடியதனில்' என்னும் பாட்டால் உணர்த்தப்பட்டது.

ஞான நடம்: இனி, இம்மூவகை ஊன நாடகத்தால் பக்குவ முதிர்ச்சி எய்தி, இருவினை யொப்பு வந்த தீவிரதர சத்திநிபாதர்களுக்கு முதல்வன் மும்மலம் கழற்றி, அருணிலையில் உய்த்து நிறுத்தி, பேரின்ப அநுபவம் பெறும்படி உபகரிக்கின்றான். இவ்வுபகாரமும் முன்னைய உபகாரங்கள் போல ஐவகைப்பட வைத்து உணர நிற்றலின், ஞான நடனம் எனப்பட்டு 'மாயைதனை உதறி' என்னும் பாட்டால் உணர்த்தப்பட்டது.



ஆநந்த நடனம்: இனி, ஞான நடனத்தின் பயனாக இன்புறும் நிலை எனப்படும் நின்மல துரியாதீத ஆநந்த நிலை எய்திய முத்தான்மாக்களும் அந்நிலையில் முதல்வன் உபகாரத்தை இன்றி அமையா. பிறப்பு நிலைக்கண் உயிர்களேயாய் நின்று அவற்றின் அறிவிச்சை செயல்களைப் பொதுவாகச் செலுத்தி உலக போகங்களை நுகர்வித்தாற்போல, வீட்டு நிலையாகிய ஆண்டும் முதல்வன் முத்தான்மாக்களின் அறிவிச்சை செயல்களைப் புறப்பொருள்களிற் செல்ல விடாமல் தடுத்துக் காட்சிப்பொருளாகிய தன்னையே விடயித்து அழுந்தி இன்புறுமாறு சிறப்பாகச் செலுத்தி உபகரிப்பன். இவ்வுபகாரம் ஆநந்த நடனம் அல்லது பர நடனம் எனப்படும். 'மோனந்த மாமுனிவர்' என்னும் பாட்டால் 'இப் பராநந்தபோத நடனம்' உணர்த்தப்பட்டது. முதல்வன் இயற்றும் திருக்கூத்தின் திருக்குறிப்பை இவ்வாறு அறிதல் தொன்றுதொட்டுவரும் கேள்வியான் அநுபவமுள்ள தேசிகன் திருவருளால் யான் எனது என்னும் செருக்கு அற்றார்க்கன்றிக் கூடாமையால், 'ஆங்காரம்-அற்றார் அறிவர் அணி அம்பலத்தான் ஆடல்' எனவும் அறிந்தார்க்குப் பிறப்பறுதல் ஒருதலை ஆகலின், 'இது பெற்றார் பிறப்பற்றார் பின்' எனவும் கூறியருளினார் ஆசிரியர் என்பது.

## அஞ்செழுத்து

நாதாந்த நாடகத்தை நன்றா அருள் செய்தீர்
ஓதீர் எழுத்தஞ்சும் உள்ளபடி — தீதறவே;
அஞ்செழுத்தீ தாகில் அழியுமெழுத் தாய்விடுமோ
தஞ்ச அருட்குருவே சாற்று. (39)

பொ-ரை: சத்திநிபாதர்க்குப் புகலிடமாக விளங்கும் அருட்குரவரே! நாதமுடிவாகவுள்ள தத்துவங்களைக் கடந்ததாகிய திருக்கூத்தின் இயல்பை நன்றாக உணர்த்தியருளினீர். இனித் திருவைந்தெழுத்தின் இயல்பை உள்ள

வாறு அருள்புரிய வேண்டும்; முதல்வன் திருநாமமாகிய இது ஐந்து எழுத்து எனப்படுமாயின், ஏனை யெழுத்துக்கள் போல அழியும் தன்மையுடையவையாகி விடுமோ என்னும் அடியேனது ஐயத்தை முன்னர் நீக்கியருள்க.

### அஞ்செழுத்தின் பொருள்

உற்ற குறியழியும் ஓதுங்கால் பாடைகளில்
சற்றும் பொருள்தான் சலியாது—மற்றதுகேள்
ஈசனருள் ஆவி எழிலார் திரோதமலம்
ஆசில்எழுத் தஞ்சின்அடை வாம். **(40)**

பொ-ரை: மொழிகளைப் பற்றி ஆராய்ந்து கூறின், அவை சொல்லும் பொருளும் என இருவகைப்படும். சொல் பொருளைக் குறிப்பது; பொருள் சொல்லாற் குறிக்கப்படுவது. முடிந்த உண்மைகள் எம்மொழியினும் அமையக்கூடும் ஆகலின், அவற்றில், சங்கேதத்தாற் (convention) பொருளைக் குறித்து நிற்கும் சொற்கள் அழியும் தன்மைய; ஆயினும் அவற்றாற் குறிக்கப்படும் பொருள்கள் சிறிதும் மாறுதல் அடையா. அவ்வாறு குற்ற மற்ற அஞ்செழுத்தாற் குறிக்கப்படும் அநாதி நித்தியப் பொருள்கள் முறையே சிவனும், அவன்றன் திருவருளும் உயிரும், எழுச்சியுள்ள திரோதான சத்தியும், மலமும் ஆகும்.

வி-ரை: சிகார முதலாக ஓதிப்பொருள்களை இணைத்துக் கண்டு கொள்க.

### ஓதும் முறை

சிவன்அருள் ஆவி திரோதம் மலம்ஐந்தும்
அவனெழுத் தஞ்சின் அடைவாம்—இவனின்று
நம்முதலா ஓதில்அருள் நாடாது நாடும்அருள்
சிம்முதலா ஓதுநீ சென்று. **(41)**



பொ-ரை: மேற்கூறியதில் ஒவ்வோர் எழுத்திற்கு ஒவ்வொரு பொருளாக ஐந்தெழுத்திற்கு ஐந்து பொருளாகும். திருவருளைத் தலைப்பட விரும்புவோன் உலகியலில் நின்று அதற்குத் தக நகரம் முதலாக ஓதின் திருவருள் காட்சிப் படாது. உலகியலின் நீங்கி நிவிர்த்தி நெறியிற் சென்று சிகாரம் முதலாக ஓதின் திருவருள் வெளிப்பட்டுத் தோன்றும். நீ அவ்வாறு நின்று அவ்வாறு ஓது.

### எய்தும் பயன்

அண்ணல் முதலா அழகார் எழுத்தைந்தும்
எண்ணில் இராப்பகலற் றின்பத்தே — நண்ணி
அருளா னதுசிவத்தே ஆக்கும் அணுவை
இருளா னதுதீர இன்று. **(42)**

பொ-ரை: அழகிய எழுத்தைந்தையும் சிகாரம் முதலாக வைத்து எண்ணிவரின், திருவருள் வெளிப்பட்டு உயிரைச் சிவத்தே, கேவல சகல நிலைகளினீங்கிய சுத்த நிலைக்கண் நின்று அனுபவிக்கும் பேரின்பத்தே உய்க்கும்; அந் நிலையில் ஆணவ இருள் பற்றறக் கழியும்.

இருள்தீர இன்று ஆகும்—என ஆக்கச் சொல்வருவித்து முடிக்க.

### முத்தி பஞ்சாக்கரம்

ஆதி மலமிரண்டும் ஆதியா ஓதினுற்
சேதியா மும்மலமும் தீர்வாகா — போதம்
மதிப்பரிதாம் இன்பத்தே வாழலாம் மாறி
*விதிப்படிஓ தஞ்செழுத்து மே. (43)

---

* மெய்கண்டதேவர் தம் உபதேச நூலைக் குறிப்பித்து மாட்டேற்றுகின்றார் எனக் கொள்க.

பொ - ரை : துணிவு பிறத்தற் பொருட்டு மீண்டும் கூறுகின்றோம்; ஆதி சத்தியெனப்படும் திரோதத்தைக் குறிக்கும் நகாரமும் மலத்தைக் குறிக்கும் மகாரமும் முன்னாகும்படி ஓதினால் அவ்வாறு ஓதுதல் மலங்களைச் சேதித்தல் இன்று; ஆதலினால் மும்மலங்களும் அவற்றான் வரும் துன்பங்களும் தீரா, ஆகலின், சிவ முன்னாக மாறி, ''பாசம் ஒருவிப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி'' என யாம் விதித்த விதிப்படி முத்தி பஞ்சாக்கரமாகக் கொண்டு ஓது. சுட்டுணர்வினால் அறியவொண்ணாத பேரின்ப நிலையில் நின்று வாழும் பேறு கிடைக்கும்.

### திருவைந்தெழுத்தின் உயர்வு

அஞ்செழுத்தே ஆகமமும் அண்ணல் அருமறையும்
அஞ்செழுத்தே ஆதிபுராணம் அனைத்தும்—அஞ்செழுத்தே
ஆனந்த தாண்டவமும் ஆறுறுக் கப்பாலாம்
மோனந்த மாமுத்தி யும். (44)

பொ - ரை: இறைவன் உயிர்கள் உய்யும் பொருட்டு அருளிச் செய்துள்ள ஆகமம், வேதம், புராணம் இவை அனைத்தின் பயனாக உள்ளது திருவைந்தெழுத்தே ஆகும். பரானந்த நிலையைப் போதித்து அதன்கண் சீவன் முத்தர்களை உய்க்கும் தாண்டவத்தைக் குறிப்பதும் திருவைந்தெழுத்தேயாம்: ஞான வரம்பு எனப்படும் மோன நிலையைத் தலைப்பட்டு எய்தும் பரமுத்தி நிலையைக் காட்டி எய்துவிப்பதும் திருவைந்தெழுத்தேயாம். முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த மேல்நிலைக் கண்ணது பரமுத்தி நிலை.

வி - ரை : திருவெழுத்தைந்தும் இங்குக் கூறியவாறு அவ்வப் பொருளை உணர்த்தி நிற்பன ஆகலின், மேல் ஆசிரியரால் ''பொய்காட்டிப் பொய்யகற்றிப் போதாநந்தப் பொருளாம் மெய்காட்''டப் பெற்று மெய்ப்பொருளைத் தலைப்பட்டமையால், அத்தலைப்பாடு நெகிழாமைப்



பொருட்டுத் திருக்கூத்தை அகத்தும் புறத்தும் காண்டலும், ஐந்தெழுத்தை மாறி விதிப்படி எண்ணுதலும் அறிவுறுத்தப் பட்டன. இங்கே ஓதுதல் அல்லது எண்ணுதல் என்றது, அங்ஙனம் அறிவால் எண்ணி நிற்றலே ஆம். இதுபற்றியே ''சென்று ஓது'' ''விதிப்படி ஓது'' என அறிவுறுத்தப் பட்டன.

### தான் (ஆதல்)

முத்தி தனையடைந்தோர் முந்துபழம் போதங்கி
வித்தகமாம் வீணை இவையிற்றின் — ஒத்த
இரதமணம் வெம்மை எழில்நாதம் போல
விரவுவரென் றோதும் விதி. (45)

பொ - ரை : பரமுத்தி அடைந்தோர் பழத்திற் சுவையும், மலரில் மணமும், நெருப்பிற் சூடும், வீணையில் இன்னிசையும் அவ்வப் பொருளில் அடங்கிப் பிரிப்பின்றிக் கலந்து நிற்றல் போல முதற்பொருளோடு கலந்து, அதில் அறிவடங்கிப் பிரிப்பின்றி நிற்பர் என முதல்வன் விதித்த நூல்கள் கூறும் என அறிக. ஆகலின், நானே முதல் என அகங்கரித்து எழாதே.

தத்துவங்கள் எல்லாம் சகசமாய் ஆன்மாவில்
பெத்தத்தில் நிற்கின்ற பெற்றிபோல் — முத்திதனில்
சித்தமலம் அற்றார் செறிந்திடுவர் என்றுமறை
சத்தியமா ஓதியிடுந் தான். (46)

பொ - ரை : இன்னும் கூறுகின்றோம் கேள்; நீ கட்டுற்று நின்ற பிறப்பு நிலையில் உனக்குக் கருவியாயிருந்த தத்துவங்கள் எல்லாம் தாம் என வேறு காணப்படுமாறின்றி நீயே எனும்படி நின்றாற்போல, வீட்டு நிலைக்கண் மலம் நீங்கிய முத்தான்மாக்கள் சிவத்திற் பொருந்தித் தாம்என ஒரு பொருள் காணப்படுமாறின்றிச் சிவமேயாகச்

செறிந்து நிற்பர் என் வேதங்கள் உண்மையாகத் துணிந்து கூறும்.

பெத்தம் - கட்டு (நிலை), பிறப்பு நிலை. பெற்றி - தன்மை.

**ஆதவன்றன் சந்நிதியில் அம்புலியி னொசோதி**
**பேதமற நிற்கின்ற பெற்றிபோல் — நாதாந்தத்(து)**
**அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்தின்பக்**
**கண்ணில் அழுந்தியிடும் காண். (47)**

பொ - ரை: ஞாயிற்றின் முன்பு நிலவின் ஒளி வேறு காணப்படுதலின்றி அதனொளியில் அடங்கி நிற்றல்போல, தத்துவங் கடந்த முதல்வன் திருவடியை அணைந்த ஆன்மா அவன் ஆண்டுத்தரும் பேரின்ப மேலீட்டில் அடங்கி அழுந்தி இன்புறும்; தன் அறிவு முனைத்துத் தோன்றப் பெறாது என அறிக.

## முத்திநிலையே ஆன்மாவிற்கு இயற்கை

**சென்றிவன்றான் ஒன்றிற் சிவபூரணம் சிதையும்**
**அன்றவன்றான் ஒன்றும்எனில் அந்நியமாம் — இன்றிரண்டும்**
**அற்றநிலை ஏதென்னில் ஆதித்தன் அந்தன்விழிக்**
**குற்றமற நின்றதுபோற் கொள். (48)**

பொ - ரை: சிவத்தை உயிர் அணைவதே வீடு எனக் கூறும்போது, உயிர் தன் சாதனங்களால் மேற்சென்று சிவத்தோடு ஒன்றும் எனின், பரம்பொருள் எங்கும் நிறை பொருள் என்னும் அடிப்படைக் கொள்கைக்கு முரண் ஆகும்; இனி, சிவமே முத்தி நிலைக்கண் உயிரோடு ஒன்றும் எனக் கூறின், முதல்வன் பிறப்பு வீடு என்னும் இரு நிலையினும் உலகெலாமாகி வேறாய் உடனுமாந் தன்மையால் உயிர்களோடு பிரிப்பின்றி நிற்பன் என்னும் அடிப்படைக் கொள்கைக்கு முரணும். இவ்விரண்டுமன்றிப் பிறப்பு நிலையினீங்கி வீடெய்துதற்கு எடுத்துக்காட்டாவது யாதோ



எனின், குருடன் விழியில் குற்றம் நீங்கியவுடன் ஞாயிற்றின் ஒளியை அவ்விழி பெற்றுப் பயனெய்துமாறுபோற் கொள். விழிக்குற்றம் உள்ளபோதும் இல்லாதபோதும் அது ஞாயிற்றின் ஒளி நிறைவில் பிரிப்பின்றி இருப்பதே; குற்றம் உள்ளபோது ஒளியில் அழுந்த மாட்டாதாய் இருளில் அழுந்தும்; குற்றம் நீங்கின் ஒளிமுன் இருள் நில்லாமையின் ஒளியில் அழுந்தும். இதுபோற் கொள்.

விழி - உயிர். குற்றம் - மலம். ஞாயிறு - சிவம் ஞாயிற்றின் ஒளி - திருவருள்.

## முத்தியில் மும்பொருளும் உள்ள நிலை

**வாக்கு மனமிறந்த வான்கருணை யாளன்உருத்**
**தாக்கறவே நிற்கும் தனிமுதல்வா — நீக்காப்**
**பதியினைப்போல் நித்தம் பசுபாசம் என்றாய்**
**கதியிடத்து மூன்றினையும் காட்டு. (49)**

பொ - ரை: உரையுணர்வுக் கெட்டா நிலையினையுடைய முதல்வனது அருளுருவாக நிலவுலகில் எழுந்தருளி உலகியலால் தாக்கப்படுதலின்றி நிற்கும் ஒப்பற்ற குரு முதல்வரே, யாவராலும் தள்ளப்படாத முதற்பொருளைப் போலவே உயிரையும் அதைத் தளைந்து நிற்கும் மலத்தையும் தோற்றக் கேடில்லாத பொருள்கள் என உணர்த்தினீர்; ஆகலின், வீட்டுநிலைக்கண் அம் முப்பொருளும் அழியாமல் நிற்கும் முறைமையினை விளக்கியருள்க.

**முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்**
**சுத்தஅணு போகத்தைத் துய்த்தல்அணு — மெத்தவே**
**இன்பங் கொடுத்தலிறை இத்தைவிளை வித்தல்மலம்**
**அன்புடனே கண்டுகொள்அப் பா. (50)**

பொ - ரை: மாணவகனே, பரமுத்தி நிலையில் முப்பொருளும் நிற்கும் முறைமையைக் கூறுகிறோம்; கேள்.

துன்பக் கலப்பற்ற பேரின்ப போகத்தை அநுபவியா நிற்பது உயிர். மிகவும் அவ்வின்ப அநுபவத்தைக் கொடுக்குஞ் செயல் முதல்வனுக்கு உளது. உலகத்தை மறைத்துச் சிவத்தை மறைக்காது நிற்குமாற்ருல், இப்பேரின்ப அநுபவம் விளைதற்கு மறைமுகமாக ஏதுவாதல் மலத்தின் செயல். இவ்வுண்மையைப் பிரமாண நூல்களின் கூற்றுக் களில் அன்பு வைத்து உணர்ந்துகொள்.

### வீட்டிற்கு வாயில்

**அப்பாஇம் முத்திக்(கு) அழியாத காரணந்தான்**
**செப்பாய் அருளாலே; செப்பக்கேள் — ஒப்பில்**
**குருலிங்க வேடமெனக் கூறிலிவை கொண்டார்**
**கருவொன்றி நில்லார்கள் காண். (51)**

பொ-ரை: ஐயனே, இத்தகைய வீட்டுநிலையை ஒருவன் பெறுதற்கு அழியாத வாயிலாவது யாது? கூறியருள்க! மாணவகனே, கூறுகின்ருேம் கேள்: குரு லிங்க சங்கமம் என்னும் இம்மூன்றுமே வீட்டிற்கு வாயிலாவன; இவ்விடங்களில் வழிபடுவோர் கருவிற் பொருந்திப் பிறந்திறவார் என உணர்க.

**கற்ரு மனம்போல் கசிந்துகசிந் தேயுருகி**
**உற்ருசான் லிங்கம் உயர்வேடம் — பற்ருக**
**முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்**
**பத்திதனில் நின்றிடுவார் பார். (52)**

பொ-ரை: சீவன் முத்தராயுள்ள தலைவர்கள் சிவஞானம் உணர்த்தும் தேசிகனையும், சிவலிங்கத் திருமேனியையும் சிவனடியார்தம் உயர்ந்த திருவேடத்தையும் சார்பாகப் பொருந்தி, கன்றையுடைய ஆவைப்போல மனம் மிகக் கசிந்துருகி, அன்பு நெறியில் நிற்பர். ஆதலின் குரு லிங்க சங்கம பத்தியே முத்திக்கு சிறந்த சாதனமாம் என்பதை அறிந்துகொள்.



### நன்றியறிவு

**வாழ்ந்தேன் அருட்கடலே வற்ருப் பவக்கடலில்**
**வீழ்ந்தே அலையாமல் மேதினியில் — சூழ்ந்துவிடா**
**வெண்ணைச் சுவேதவன மெய்கண்ட நாதனே**
**உண்மைத் தவப்பயனே உற்று. (53)**

பொ-ரை: திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியுள்ள சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமம் உள்ள மெய்கண்டநாதரே, கருணைக்கடலே, உம்மை அடைந்து சிவஞானம் உபதேசிக்கப் பெற்றமையால், அடியேன் முன்செய்த உண்மைத் தவப்பயன் கைகூடப் பெற்று, வற்றுதலின்றி நீடும் பிறவிக்கடலில் வீழ்ந்து அலையாமல் சிவானந்த வெள்ளத்துத் திளைத்து வாழும் பேறுபெற்றேன். உமது செம்மலர் நோன்தாள் நீடுவாழ்க;

உண்மை விளக்கவுரை முற்றுப்பெற்றது.

---

### சிறப்புப்பாயிரம் - அபியுத்தர்வாக்கு

**மன் அதிகை வாழும் மனவா சகங்கடந்தான்**
**மின்னனைய வாழ்விலுரு மெய்கண்டான் — பன்னுமறை**
**வண்மைதரும் ஆகமநூல் வைத்த பொருள்வழுவா**
**உண்மைவிளக் கஞ்செய்தான் உற்று.**

மனவாசகங்கடந்த தேவர் திருவடி வாழ்க!

மெய்கண்டநாதன் வீரைகழல் வெல்க!!



உ

Gurupadam

# UNMAI VILAKKAM

Translation by J. R. Nallasamy Pillai B.A., B.L.

## INVOCATION

We place Him, in our heart, the Five-armed God in strong rut of russet colour, with tusked mouth and pot-belly; so that we may be freed of our ignorance and be enabled without fault to spread the Light of Truth, to be gathered from the Sacred Agamas.

## SUBJECT PROPER

O Thou, my teacher, that, perceiving the truth, showedst the truth of Supreme knowledge and Bliss after removing the falsehood, by proving it to be false.

O Thou, Truth, that will not give out false-hood,
O Thou, that residest in Tiruvennainallur,
Hear, O Thou, my humble petition, and deign to answer my queries!

O, my Teacher, explain to me the following!
What are the 36 tattvas? What is Anava?
What is that Karma which arose even then?
What am I who seem to be one with, these?
Who art Thou? What is the Lord's Sacred Dance and what is the truth of the Panchakshara? 2

O my son, who is immersed in Bliss-ful Yoga, hear what I am now imparting to you in accordance with the teachings of the Supreme Agamas, graciously uttered of yore, by the Supreme Siva. 3



The earth's form is a square. The water is of the form of a crescent. The fire is of the form of a triangle always. The air is a six-sided figure. The Akas is a circle. And the soul gets a body formed of these. 4

The colour of these is golden, white, red, black, smoky-coloured, respectively and their letters are ல, வ, ர, ய, ஹ. (L.V.R.Y.H.) 5

Their symbols are diamond-sword, the lotus-flower, SWASTIKA, the six spots and the AMRITABINDU respectively. So the old Agamas declare, O my son. 6

The Gods for the elements Earth etc, are Brahma, Vishnu, Rudra Maheswara, and Sadasiva; and their functions are respectively Creation, protection, involution, obscuration and showing Grace (Anugraha). 7

Brahma creates; the lotus-eyed Vishnu protects; Rudra destroys, and Isa obscures and Sadasiva shows grace always. 8

Earth supports being hard, water softens remaining cool, fire fuses generating heat, air collects being in constant motion. Ether permeates and gives room for all things. 9

We have now set forth the qualities of the five elements. If we are to tell you about the five deceitful sense objects, they are the desire-producing Sound, Touch, Sight, Taste and Smell. 10

Now I shall tell you about the five sense organs. Know them to be the ear, the skin, the eye, the tongue and the nose, which perceive the low sensations in this low world. 11

The ear perceives sound through Akas. The body perceives touch through the air. The eye perceives light through fire. The tongue perceives taste through water. And the nose perceives smell through the earth. So the Agamas declare. They who conquer these senses secure the Bliss-ful Beatitude. 12-13

The Karmendriyas giving rise to speech etc., are mouth, feet, hands, anus and the genital organs. 14

The mouth speaks with the aid of Akas; the feet move with the aid of air; the hands work with the aid of fire; the anus excretes with the aid of water; the genital organ gives pleasure with the aid of earth. 15

Hear now the enumeration of the Antahkaranas. They are Manas, Buddhi, Ahankara and Chitta. They respectively conceive, Judge, will and reflect. 16

The foregoing 24 tattvas are stated by ancient Agamas to be the Atma-tattvas. Hear now the Vidya-tattvas expounded by me. 17

Time, Niyati, Kala, Vidya. Raga, Purusha, Maya, this is their order. Hear now their nature with attention. 18

TIME sets limit to enjoyment in the form of the past, gives enjoyment in the present, and holds the prospect in the form of the future. NIYATI-tattva fixes the order and sequence of Karma. KALA-tattva induces conation. VIDYA-tattva induces cognition. Raga induces affection. MAYA induces general drowsiness. Purusha is the name of the soul when it is inclined towards enjoying sense objects. 19



We have now dealt with the Vidya tattvas. Hear now of the Suddha tattvas. They are Suddha-Vidya, Iswara, Sadasiva, Sakti and Siva tattvas. 20

Suddha-Vidya is the embodiment more of intelligence than of action. Iswara tattva is more of action than of intelligence. Sadasiva-tattva is both in equal proportion. Sakti-tattva is action and Siva-tattva is Jnana alone. These are he five phases of kundalini, the pure Maya, and they form the directive part of the psycho-physical organism. 21

### CONATIVE, COGNITIVE AND AFFECTIVE

We have now fully stated the 36 Tattvas. Hear now about the two kinds of Mala, Anava and Karma. Anava veils the soul's consciousness. Karma Mala induces you to identify yourself thoroughly with the chain of pleasures and pains. 22

O Thou rare Teacher, Thou hast explained to me the nature of the 36 Tattvas, Anava and Karma. Deign now to show me the nature of myself. 23

Hear well what I state. Achit cannot stand before Pure Chit. Chit will not perceive Achit. The Atma (Soul) is what distinguishes and experiences both Chit and Achit. So the Vedas declare without doubt: 24

The 36 Tattvas cannot be conscious of themselves. The six kinds of taste cannot perceive themselves. So also the Tattvas do not know themselves. They are not self-conscious. 25

Even as a person tastes the edibles and then describes them as such and such, so you are the self-conscious principle, who, uniting with these Tattvas, perceive each and all of them, and describe them. 26

"Out of thine undiminished grace, hast thou shown me my nature. Explain to me Thy own Imperishable Form." "As the Sun enables the eye to see, so will we enlighten you and your consciousness-force." 27

Also understand that the sense organs that act under the direction of the Soul's consciousness-force cannot see either themselves or the directing principle. So also we act as your soul and direct you; but you don't see us, your very life. 28

"As the letter '*A*' is to the rest of the letters, so do we stand as the life of all life. When we are not present in any soul, then will there be no light. So the good Agamas declare." 29

O Meykandanatha graciously expound so that I may understand the nature of the Sacred Dance of the Lord in the form of the five letters seen by the sages. 30

"O my son, hear. The Supreme Lord dances in the soul indicated by the letter YA, with a form composed of the five letters SI, VA, YA, NA, MA for the purpose of removing our sins. 31

Hear now how the Dance is performed. In his feet is NA; in his Navel is MA; in his shoulders is SI; in his face is VA; in his Head is YA. 32

The hand holding the drum is SI; the hand held out is VA; the hand holding out protection is YA; the hand holding the fire is NA; the foot pressing down Muyalaka is MA. 33

The arch (திருவாசி) over Sri Nataraja is OMKARA; and the AKSHARA which is never separate from the OMKARA is the filling Splendour. This is the dance of the Lord of Chitambara. They understand this who have



lost their egoism (Ahankara). Understanding, they leave their births behind. 34

Creation starts from the Drum. Protection proceeds from the Hand of Hope. The fire produces Destruction. From the Foot pressing down proceeds TIROBHAVA; the Foot held aloft gives Mukti. 35

By these means, Our Father dispels the darkness of MAYA, burns the strong KARMA, stamps down MALA (Anava) and showers Grace, and lovingly plunges the soul in the Ocean of Bliss. This is the nature of His Dannce 36

The SILENT Jnanis, destroying the three kinds of MALA establish themselves where their egoism is destroyed. There they witness the sacred Dance filled with Bliss. This is the Dance of the SABHANATHA whose very form is Grace. 37

The One who transcends thought and speech assumes graciously the Form composed of the PANCHAKSHARA in the Dancing Hall of PARASAKTI, witnessed by his Consort, Uma, Haimavati. They never see births who see this mystic Dance." 38

O my gracious Guru! Thou hast explained to me beautifully the nature of the NADANTA Dance. Let me now know the nature of the Panchakshara. Can they be one with the letters which are perishable? 39

"The Symbols linguistic may be perishable but not the entities denoted in any language. The meanings of the five letters respectively are God, His Grace (Sakti), Soul, Tirodana, and MALA. 40

God, Grace, Soul, Tirodana, and Mala are the purport of the five letters (Sivayanama). If pronounced

beginning with NA, you will not obtain Grace. You will obtain it when you pronounce it beginning with SI. 41

If this beautiful PANCHAKSHARA is meditated upon, the soul getting rid of its ANAVAMALA will land in the Region where there is neither light nor darkness, and there, God's Grace (Sakti), will unite it to Sivam. 42

If the PANCHAKSHARA is pronounced with the letters denoting the two MALAS first then you will not get rid of his three MALAS, and obtain Bliss. If pronounced otherwise according to the injunction, your JNANA will be boundless and you can live in Bliss. 43

The PANCHAKSHARA is the very essence of the Agamas and the Vedas. given out by the gracious God. In it, are found the PURANAS. In it, is the Blissful Dance. And in it, is found the silent Mukti, which passes beyond all. 44

The Agamas declare that the nature of the union secured by the Muktas is like that of the fruit and its taste, fire and its heat, the Veena and its tune. 45

The Vedas strongly declare that as the various Tattvas are found united with oneself inseparably in the bound condition, so the souls in the freed condition will dwell as one with God. 46

As the moon's light is indistinguishable in the Light of the Sun, so will the soul unite itself to the foot of the Supreme Lord and plunge itself in Bliss. 47

If it be said that the soul had to go and unite itself to God, then the Omnipresence of Siva will be destroyed. If God is said to have united Himself to the soul, then they must have been separate. But what then is the truth? The position is like that of the Sun which surrounds the man who had lost his blindness 43



Thou tellest me that the Supreme one, who is past thought and speech, is gracious and suffers no taint, and that like this PATI, the PASU and PASA are also eternal. Show this in MUKTI also. 49

"O my Son, Hear how they are in MUKTI. He who enjoys the Supreme Bliss is the soul. He who imparts this Supreme Bliss is the First Cause. That which increases this happiness is MALA. Understand this in all love." 50

"O my father, let me know the unfailing means of securing this Mukti?". "Hear me state this. They who regard and worship the GURU, LINGA, and GOD'S DEVOTEES as the incomparable God will not suffer births and deaths." 51

"Meeting in Love, as the cow that had calved recently, the Jivan-muktas will establish themselves in true devotion to GURU, LINGA and BAKTAS, and will be possessed of great love to them, which will destroy their sins." 52

O, Meykandanatha, the fruit of true Penance, who dwellest in Tiruvennainallur and known to be Svetavana, O, Ocean of Grace, I have been saved by thee, saved from being tossed about in the Ocean of Sorrow. 53

# பாட்டு முதற்குறிப்பகராதி

எண்கள் பக்கங்களைக் குறிக்கும்

# எங்கள் வெளியீடுகள்

1 சேக்கிழார் நாயனுர் புராணம்
—உமாபதி சிவாசாரியர் இயற்றியது. திருவண்ணுமலை ஆதீனத்து ஆறுமுகத்தம்பிரான் சுவாமிகள் உரையுடன் கூடியது. 2-50

2 திருக்கேதீச்சரத் திருப்பதிகங்கள்
—சம்பந்தர் சுந்தரர் பாடிய தேவாரங்கட்கு திரு. க. வச்சிரவேலு முதலியார், B.A., L.T., வித்வான் ந. சுப்பையபிள்ளை எழுதிய விளக்கவுரைகளுடன் கூடியது. -60

3. சுவாமி பிள்ளைத்தமிழ்
—சிவயோக சுவாமிமீது பண்டித வித்வான் க.கி. நடராஜன், B.O.L. Dip-in-Ed. பாடியபத்திப்பனுவல். 2-50

4. கந்தபுராண நவநீதம்
—ஸ்ரீ காசிவாசி செந்திநாதையர் எழுதியது. பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளையின் அணிந்துரை கொண்டது. 4-00

5. சிவபுராணம்
— வித்வான் ந. சுப்பையபிள்ளை பார்வையிட்ட உரையுடன் கூடியது. -10

6. திருக்குறிப்புத் தொண்ட நாயனுர் புராணம்
—ஆறுமுகத்தம்பிரானுரையும் பண்டிதர் மு. கந்தையா B. A. எழுதியுதவிய உரைவிளக்கக் குறிப்பும் கொண்டது. 5-00

7. அபிராமி அந்தாதி
—ம. க. வேற்பிள்ளை உரையும், பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை எழுதிய உரைச் சிறப்புங்கொண்டது. 1-50

8. கந்தரலங்காரம் – அருணகிரிநாதர் அருளிச்செய்தது
—திரு. மு. திருவிளங்கம் அவர்கள் எழுதிய உரையும், பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை எழுதிய உரைச் சிறப்புங்கொண்டது. 2-50

9. திருவுந்தியார் – (மெய்கண்ட சாத்திரங்களில் முதலாவதாகவுள்ளது) திருவியலூர் உய்யவந்த தேவநாயனுர் அருளியது. திருவாவடுதுறை ஆதீனத்து தில்லைச்சிற்றம்பலவர் என்னும் சிவப்பிரகாசர் செய்தருளிய உரையும், திரு. வித்வான் பொன். அ. கனகசபை எழுதியுதவிய உரைவிளக்கமும், பொழிப்பும் கொண்டது. 1-50

10. உண்மை விளக்கம் - மெய்கண்ட சாத்திரங்களில் சிறந்தவொன்று—மனவாசகங் கடந்த தேவநாயனாரால் அருளிச்செய்யப்பட்டது. சித்தாந்த வித்தகர் திரு. க. வச்சிரவேலு முதலியார், B.A.,L.T., அவர்கள் எழுதிய விரிவான தெளிவுரையோடும், பண்டிதமணி எழுதியுதவிய உரைச்சிறப்புப்பாயிரத்தோடும் கூடியது. 1-50

11. தாமோதரம் — ராவ் பகதூர் சி. வை. தாமோதரம் பிள்ளை, B.A., B.L., அவர்கள் தாம் பதிப்பித்த வீரசோழியம், கலித்தொகை, இலக்கண விளக்கம், சூளாமணி, தொல்காப்பியம் முதலிய நூல்களுக்கு எழுதிய நீண்ட ஆராய்ச்சிப் பதிப்புரைகளின் தொகுப்பு; பண்டிதமணி சி. கணபதிப்பிள்ளை அவர்களின் அணிந்துரையும், "தொல்காப்பியப் பதிப்பு" என்ற கட்டுரையும், மதுரைப் பல்கலைக் கழகத்துணை வேந்தர், பன்மொழிப் புலவர் உயர் திரு தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களின் அணிந்துரையும் கொண்டது. 4-00

12. சிவஞானசித்தியார்—சுபக்கம்—திரு. மு. திருவிளங்கம் அவர்களின் புத்துரையுடன். (அச்சில்)

## இவை கிடைக்குமிடங்கள்

1. ஸ்ரீ லங்கா புத்தகசாலை,
   *234, கே. கே. எஸ். வீதி, யாழ்ப்பாணம்.*
2. சோதிட விலாச புத்தகசாலை,
   *46, பெரியகடை, யாழ்ப்பாணம்.*
3. ஸ்ரீ காந்தா புத்தகசாலை,
   *213, கே. கே. எஸ். வீதி, யாழ்ப்பாணம்.*
4. விஜயலட்சுமி புத்தகசாலை,
   *248, காலி வீதி, வெள்ளவத்தை, கொழும்பு 6.*
5. இரத்தின புத்தகசாலை,
   *130, மலே வீதி, கொம்பனித்தெரு, கொழும்பு 2.*
6. தனசக்தி, திருகோணமலை.
7. பலநோக்குக் கூட்டுறவுச் சங்கம், பளை.

**யாழ்ப்பாணம்**
**கூட்டுறவுத் தமிழ்நூற் பதிப்பு விற்பனைக் கழகம்**
411/1, காங்கேசன்துறைவீதி, யாழ்ப்பாணம்.